Regd: No. TN - MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People MADRAS Phone: 420212 8 பக்கம் விலை 70 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE No: G-6 TN-MS (C)P. P. 55



மக்கள்

மக்களுக்குள் எந்தக் காரணங் கொண்டும் பேத உணர்ச்சியோ, அதனாலான கேடுகளோ இருக்கக்கூடாது.

பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்



மறப்போம்

கெட்டவற்றை மறந்து நல்லவற்றை நினைத்து செயல்படுவோம்.

புரட்சித்தலைவர்

மலர் 12 சென்னை 17-1-1988 ஞாயிறு வெளியூர் 18-1-1988 திங்கள் இதழ் 91

★ இதயதெய்வம் பிறந்தநாளில் ஒரு லட்சம் ஏழைகளுக்கு சாப்பாடு வழங்கும் விழா
★ தட்டு-கரண்டி ஏந்தி குழந்தைகளுக்கு சோறு பரிமாறினார் அன்னை
★ அன்னையைக் காண வழியெங்கும் லட்சோப லட்சம் மக்கள்

# பிள்ளைகளின் பசி போக்கி ஜானகி எம்.ஜி.ஆர். மகிழ்ச்சி



சூரியனும், சந்திரனும் உள்ளவரை-
சிறுசிறு கூழாங்கற்களும்
பெரிய பெரிய மலைகளாக மாறுகிற வரை
எங்கள் இதய தெய்வமே
மக்கள இதயங்களில் நீ வாழ்வாய்!
**கண்ணீர்மல்க வணங்குகிறோம்**
**காத்தருள்வாய்!**

-கா

## ஊமைக்குழந்தைகளுக்கு கம்ப்யூட்டர் கருவிகள் வாங்க சொந்த பணம் ரூ. ஒரு லட்சம் அன்னை நன்கொடை

**சென்னை, ஜன. 17- இதய தெய்வம் புரட்சித்தலைவர் பிறந்த நாளான இன்று சென்னையில் ஒரு லட்சம் ஏழைகளுக்கு அன்னை ஜானகி எம்,ஜி.ஆர். ஏற்பாட்டின்படி உணவு வழங்கப்பட்டது. பல்வேறு இடங்களில் அன்னை ஜானகி எம்,ஜி.ஆர். உணவு பரிமாறினார்.**

ஊமை குழந்தைகளுக்கு கம்ப்யூட்டர் கருவிகள் வாங்க அன்னை ஜானகி எம் ஜி ஆர் தமது சொந்தப்பணத்திலிருந்து ஒருலட்சம் ரூபாய் நன்கொடை வழங்கினா ,

இதய தெய்வம் புரட்சித்தலைவர் பிறந்த நாளான இன்று தமிழகமெங்கும்கழகத்தோழர்கள் ஏழைகளுக்கு இலவச உணவு வழங்கினார்கள்.

சென்னையில் பல்வேறு பகுதிகளில் ஒரு லட்சம் பேருக்கு இலவச உணவு வழங்க அன்னை ஜானகி எம்ஜிஆர் ஏற்பாடு செய்திருந்தார்.

சைதாப்பேட்டை சின்ன மலை அருகில் இன்று காலை 10.50க்கு ஏழை மக்களுக்கு அன்னை உணவு வழங்கினார், முதலில் இனிப்புபரிமாறினார். பின்னர் அப்பளம்சோறு பரிமாறினார்.

குழந்தைகள் உண்பதை அருகிலிருந்து பார்த்து மகிழ்ந்தார் அன்னை ஜானகி எம்.ஜி.ஆர். சில குழந்தைகளுக்கு சாப்பாடு ஊட்டி விட்டார்.

அதன்பின்ஜெமினி அருகில் உள்ள ஊமைக்குழந்தைகள் பள்ளிக்கு அன்னை வருகை தந்தார்.

அங்கு குழந்தைகளுக்கு உணவுப் பரிமாறினார். குழந்தைகளோடு அமர்ந்து அன்னையும் உணவு அருந்தினார்.

அந்தப் பள்ளியின்முதல்வர் பிரின்சிபால் பள்ளிக்குழந்தைகளிடம் வந்திருப்பவர் யார் என்று கேட்டார்

தமிழக முதலமைச்சர் என்பதை சைகை மூலம் குழந்தைகள் தெரிவித்தனர்.

இவர் யாருடையதுணைவியார் என்று பிரின்சிபால் கேட்டார்.

"எம்.ஜி.ஆரின் துணைவியார்" என்று குழந்தைகள் பதிலளித்தனர்.

இதனைக்கண்டு அன்னை ஜானகி எம்ஜிஆர் சிரித்தார்.

சில குழந்தைகளின் மோவாயைத்தட்டிஅன்பைப் பொழிந்தார் அன்னை. குழந்தைகளுடன் 20 நிமிடம் இருந்து மகிழ்ந்தார் அன்னை ஜானகி எம். ஜி. ஆர்.

மற்றும்அண்ணாநகர் ராயபுரத்திலும்உணவு வழங்கும் நிகழ்ச்சிகளில் முதல்வர் ஜானகிஎம்ஜிஆர் கலந்துகொண்டார்.

மூத்த துணைப்பொதுச் செயலாளர் எஸ். இராகவானந்தம் அமைச்சர்கள்ப.உ.சு., பொன்னையன் வி. வி. சுவாமிநாதன் மற்றும் வாரியத் தலைவர்கள் ஜேப்பியார், சுலோசனாசம்பத் செங்கம் ஜப்பார் அங்கமுத்து கல்யாணிராமசாமி கவியரசு காமராசன் கவிஞர் முத்து ராமலிங்கம் கோ ஆப்டெக்ஸ் தனி அதிகாரி அனகாபுத்தூர் ராமலிங்கம் எம் எல் ஏக்கள் சைதை துரைசாமி வே தமிழ் மணி மற்றும் கழகத் தோழர்கள் கலந்து கொண்டனர்.

அண்ணா நகரில் சாப்பாடு வழங்க அன்னை வரும்போது அறிஞர் அண்ணா சிலைக்கு மாலை அணிவித்தார்

அங்கு ஒரு குழந்தைக்கு சத்யா என பெயா சூட்டினார்,

பின்னர் ராயபுரம் சென்றார். ராயபுரத்தில் ஏராளமானமுஸ்லிம்கள் வரவேற்பளித்தனர்,

பல்லாயிரக் கணக்கான பொது மக்கள் சாலையின் இருபுறங்களிலும் நின்று 'புரட்சித்தலைவரின் ஒரேவாரிசு ஜானகி எம்.ஜி. ஆர் வாழ்க' என முழக்கமிட்டனர்.

ராயபுரத்தில்எம்.ஏ.காஜா தலைமையில் உணவு வழங்கும் விழா நடந்தது. பெண்கள் மலர் தூவி அன்னையை வரவேற்றனர்.

கிருஷ்ணராஜ் என்பவரின் குழந்தைக்கு இருதய ஆபரேஷன் நடக்கிறது.

இதற்காககாஜா ரூபாய் 10 ஆயிரம் நன்கொடை அளித்தார். அந்த தொகையை அன்னை ஜானகி எம் ஜி.ஆர் கிருஷ்ணராஜிடம் வழங்கினார்.

பின்னர் திருவொற்றியூர் பகுதியில் கடல் அரிப்பு பகுதிகளை முதல்வர் பார்வையிட்டார் ஏராளமான மக்கள்கூடி வாழ்த்து முழக்கமிட்டு அன்னையை வரவேற்றனர். அனைவருக்கும் வணக்கம் தெரிவித்து கை அசைத்தார் இரட்டை விரலை காண்பித்து அன்னை கையசைத்தபோது மக்கள் ஆரவாரம் செய்து வரவேற்றனர்

## ஒரு பானை சோற்றுக்கு...

இதயதெய்வம் புரட்சித்தலைவர் மறைந்த பிறகு தமிழகத்திலுள்ள பெரும்பாலான பத்திரிகைகள் எந்த வரைமுறையுமின்றி எல்லா எல்லைக் கோடுகளையும் தாண்டி என்னென்னவோ எழுதி வருகின்றன

'பொய் சொன்னால் போஜனம் கிடைக்காது பொய் சொல்லுபவன் வீட்டில் வெள்ளெருக்குப் பூக்கும் என்ற நியதிகளைப்பற்றி இவர்களுக்கு கவலை இல்லை அன்றாடம் பொய்யை புளுகை பரபரப்பாக எழுதி கல்லா கட்டினால் போதும் என்பதே இந்தப்பிறவிகளின் வாழ்க்கை முறையாகி விட்டது

இவர்களுக்கு ஜாதீய உணர்வு இருக்கிறது என்றுசொன்னால்கோபம் வருகிறது விழுந்து பிராண்டுகிறார்கள் ஆனால் அதுதான் உண்மை என்பது உலகறிந்தது

ஆனந்த விகடன் அரசியல் நாகரீகத்தின் எல்லையை மீறி மறைந்த இதயதெய்வம் புரட்சித்தலைவரின் குடும்பத்தை பற்றி உறவினர்களைப் பற்றியெல்லாம் எழுத ஆரம்பித்துவிட்டது

அன்னை ஜானகி எம் ஜி ஆர் முதல்வராகப் பதவியேற்றதைப் பற்றி 10-1-88 ஆனந்தவிகடனில் எழுதப்பட்ட தலையங்கத்தைக் கண்டு மனங்குமுறாதவர்களே இல்லை தரங்கெட்ட எழுத்துக்கு இந்த தலைமுறையின் சாட்சியம்அந்தத்தலையங்கம்தான்!

ஆனந்தவிகடன் 17-1-88 இதழில் லீலாவதி அவர்களிடம் பேட்டி என்ற பெயரில்வந்திருக்கிற விஷயங்கள் அனைத்தும் அன்னை ஜானகி அம்மையாரின் புகழைச் கெடுக்கமுற்பட்டிருக்கிற சதி என்பதை நாடறியும்என்ன எழுதினாலும் அன்னையார் பதில் சொல்லமாட்டார் என்ற அசட்டுத் தைரியத்தைத் தவிர உண்மை அந்தப் பேட்டியில் கடுகளவும் இல்லை

இதய தெய்வம் புரட்சித்தலைவர் மறைந்ததும் அடங்காப் பிடாரி ஜெயலலிதா கட்சியையும், ஆட்சியையும், அழிக்கச் சதி செய்கிறார். பெரியவர் வீட்டின் சில பிள்ளைகள் "மைனர்" என்றும் சிலுக்கு என்றும் பெயர் பெற்ற மாஜி மந்திரி ஒருவருடன் சுற்றிக் கொண்டிருப்பதாக தகவல்கள்கூறுகின்றன. நாம் இதுவரை அதுபற்றி எழுதியது இல்லை:

திருமதி லீலாவதியின் பேட்டியில் உள்ள ஒன்றே ஒன்றைச் சுட்டிக் காட்டுகிறோம்.

"எங்க குடும்பத்துக் குழந்தைகளுக்கெல்லாம் அவர்தான் (எம் ஜி ஆர்) பெயர் வைத்தார்,

"சதி லீலாவதி" படம் வெளியான போது நான் பிறந்தேன் அதனாலே சேச்சா தான் (எம்.ஜி.ஆர்) எனக்கு 'லீலாவதி" என்று பேர் வெச்சார்" என்று திருமதி லீலாவதி தமது பேட்டியில் குறிப்பிட்டிருக்கிறார்கள்

"சதிலீலாவதி" படம் வெளிவந்த ஆண்டு 1937 ஆனால் திருமதி லீலாவதிக்கு இன்னும் 40 வயதே ஆகவில்லை-ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்.

"ஸ்வராஜ்யம் எனது பிறப்புரிமை" என்று முழங்கிய இந்திய சுதந்திரத்தின் முன்னோடி மராட்டிய சிங்கம் திலகர் பிரான்

அண்ணல் காந்திஜி கொலை வழக்கில் திலகரின்பேரன் ஒருவன் குற்றவாளி இது பழைய வரலாறு

யார் என்ன சொன்னாலும் உண்மைகள் உறங்குவதில்லை

- கா

## பணம் வாங்கிய எம்.எல்.ஏ.யின் ஓட்டுரிமை பறி போகிறது

சென்னை, ஜன. 17- அடங்காப்பிடாரி அணியிடம் பணம் வாங்கிய எம் எல் ஏ யின் ஓட்டுரிமை பறி போகிறது.

தமிழகமே அர[illegible] ஒரு எம் எ ஏ அடங்காப்பிடாரி வலையில் விழுந்தாராம். தனது அணியை ஆதரித்தே ஓட்டுப் போட வேண்டும் என்று அடங்காப்பிடாரி கூறியதாம்

அந்த அரசனுக்கு அடங்காபபிடாரி அணி பணம் கொடுத்ததாகத் தெரிய வருகிறது.

பணம் பெற்று வேறு பக்கம் தாவும் எம்.எல். ஏ ஓட்டுப் போட முடியுமா?

ஓட்டுரிமை பறிபோகும் என்கிறது அரசியல் சட்டம்,

# நாட்டு நடப்பு | கழுதையை இரவல் தர மறுத்த முல்லா

பாசமுள்ள நெஞ்சங்களே

பொய் சொல்வதில் முல்லாவிற்கு நிகர் முல்லாவே இப்போது தமிழ் பத்திரிகை உலகில் முல்லாவுக்குப் போட்டியாக பல முல்லாக்கள்.

'ஆர்.எம்.வீ. கோஷ்டிக்கு ஆள் இல்லை' 'ஜானகி அம்மையார் கவலை' 'அடங்காப் பிடாரிக்கு 90 சதவீத ஆதரவு' இப்படியெல்லாம் செய்தி போடும் பேர்வழிகளைப் பார்க்க பழைய முல்லா இப்போது உயிருடன் இருந்தால்- "ஓ.. நம்மைவிடப் பெரிய கோணிப்புளுகன் பிறந்துவிட்டான்" என்று வெட்கப்பட்டு தற்கொலை செய்து கொண்டிருப்பான்.

இப்போது மேட்டுக்குடி மக்கள் நடத்தும் சில பத்திரிகைகள் வெளியிடும் பொய்களைப் படித்ததும் முல்லாவின் பழைய கதை ஒன்று நினைவுக்கு வருகிறது.

ஒருநாள் தெரிந்த நண்பர் ஒருவர் முல்லாவிடம் வந்து, "முல்லா இன்று ஒரு நாள், உங்கள் கழுதையை இரவல் தந்தால் இன்று மாலையே திருப்பித் தருகிறேன்" என்று கேட்டார்.

முல்லா, தம்முடைய கழுதையை அவருக்கு இரவல் கொடுக்க விரும்பாததால் "முன்பே என்னுடைய கழுதையை வேறொரு நண்பருக்கு இரவல் தந்து விட்டேன்" என்று சொன்னார்.

வந்திருந்த நண்பர் கிளம்பியபோது, வீட்டின் பின்பக்கமிருந்த கழுதை கத்தியதால், 'முல்லா உள்ளே கழுதை கத்தும் சத்தம் கேட்கிறதே" என்று முல்லாவைக் கேட்டார்.

"பொய் பேசி, மாட்டிக் கொண்டோமே" என்று முல்லா தவிக்காமல், நண்பரைப் பார்த்து, "ஒரு மனிதனின் வார்த்தையை நம்பாமல், ஒரு கழுதையின் வார்த்தையை நம்பும் உங்களுக்கு, என் கழுதையை இரவல் பெறும் தகுதி கிடையாது" என்று மிகுந்த சினத்துடன் கூறிக்கொண்டே கதவைச் சாத்திக் கொண்டு உள்ளே போய்விட்டார்.

பொய் வியாபாரிகளான கோடம்பாக்கம் புதிய முல்லாக்கள் நமது பழைய முல்லா இவர்களில் பெரிய புளுகன் யார் என்று நீங்களே சொல்லுங்களேன்!

-கா

# பிரதமர் ராஜீவ் சுவீடன் பயணம்

புதுடெல்லி, ஜன 17 பிரதமர் ராஜீவ் இம்மாதம் 20ம்தேதி சுவீடன் போகிறார் அங்கு நடைபெறும் ஆறு நாடுகளின் தலைவர்கள் மாநாட்டில் பங்கேற்கிறார்



சமாதானம், ஆயுதக் குறைப்பு, வளர்ச்சித்திட்டங்கள் பற்றி விவாதிப்பதற்காக இந்தியா, அர்ஜென்டைனா, மெக்சிகோ, கிரீஸ், தான்சானியா, சுவீடன், ஆகிய ஆறு நாடுகளின் தலைவர்கள் மாநாடு சுவீடன் தலைநகர் ஸ்டாக்ஹோமில் வரும் 21ந் தேதி தொடங்குகிறது. இந்த மாநாட்டில் பிரதமர் ராஜீவ் காந்தி பங்கேற்கிறார் அதற்காக அவர் 20ந் தேதி சுவீடன் போகிறார்.

## பிரதமரின் நிகழ்ச்சி விவரம்

மாநாடு இரண்டு நாட்கள் நடக்கிறது. மாநாடு முடிந்ததும் ராஜீவ்காந்தி மேலும் ஒரு நாள் சுவீடனில் தங்கி இருந்து பல்வேறு நிகழ்ச்சிகளில் கலந்து கொள்கிறார். 22ந் தேதி சுவீடன் சென்று இங்வார்கால்சனுடன் பேச்சு நடத்துகிறார்.

23ந்தேதி ஸ்டாக்ஹோமில் உள்ள ஒருபள்ளிக்கூடத்திற்கு சென்று நிகழ்ச்சி ஒன்றில் கலந்துகொள்கிறார். அதைத் தொடர்ந்து எலெக்ட்ரானிக் தொழிற்சாலையை பார்வையிடுகிறார். மாலையில் ஸ்டாக்ஹோமிலிருந்து புறப்பட்டு நள்ளிரவு டெல்லி திரும்புகிறார்.



திருவள்ளுவர் தின விழாவில் கலந்துகொண்ட முதல்வர் ஜானகி எம் ஜி ஆர் விருது வழங்குகிறார் உடன் அமைச்சர் ஆர் எம் வீ திருக்குறளார் உள்ளனர்

# சென்னை பல்கலை புதிய துணை வேந்தராக ஞானம் நியமனம்

சென்னை.ஜன.17- சென்னை பல்கலைக் கழக புதிய துணை வேந்தராக, ஏ. ஞானம் நியமிக்கப்பட்டுள்ளார். இதற்கான உத்தரவை ஆளுநர் குரானா பிறப்பித்துள்ளார்.

புதிய துணை வேந்தரைத் தேர்ந்தெடுக்க முன்னாள் துணைவேந்தர் மால்கம் ஆதிசேசய்யா தலைமையிலான ஒருகமிட்டி மூன்று நபர்களின் பெயர்களை ஆளுநருக்கு பரிந்துரை செய்திருந்தது.

இதை ஆளுநர் குரானா பரிசீலனை செய்து சென்னை பல்கலைக் கழகத்துக்கு புதிய துணை வேந்தராக ஞானத்தை நியமித்திருக்கிறார்.

ஞானம் தற்போது பாரதிதாசன் பல்கலைக் கழக துணை வேந்தராக இருக்கிறார் ஞானத்தின் இயற்பெயர் ஆறுமுகம் ஞானம் தஞ்சை மாவட்டம் மயிலாடுதுறையைச் சேர்ந்தவர் இவர் அமெரிக்காவிலுள்ள கரோலின் பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்றவர்.

உலக நாடுகள் பலவற்றிற்கு சென்று ஆராய்ச்சி கட்டுரைகள் படித்து பல சிறப்புபரிசுகளையும் ஞானம் பெற்றுள்ளார் இவருக்கு மனைவியும் 3மகள்களும் ஒரு மகனும் இருக்கிறார்கள்

## கிர்வானிக்கு ரூ.21 ஆயிரம் பரிசு

சென்னை,ஜன. 17- கிரிக்கெட் வீரர் கிர்வானிக்கு மத்திய பிரதேச அரசு ரூ 21 ஆயிரம் ரொக்க பரிசு வழங்குகிறது

சென்னை கிரிக்கெட டெஸ்ட் போட்டியில் சுழல்பந்து வீச்சாளர் கிர்வானி 16 விக்கெட்டுகளை வீழ்த்தி உலக சாதனை படைத்துள்ளார். அவருக்கு மத்திய பிரதேச அரசு 21 ஆயிரம் ரூபாய் ரொக்கப்பரிசு அறிவித்துள்ளது.

கிர்வானிக்கு இந்திய கிரிக்கெட் போர்டு 10 ஆயிரம் ரூபாயும் தமிழக கிரிக்கெட் போர்டு 5 ஆயிரம் ரூபாயும் பரிசு வழங்கின. கிர்வானி மத்திய பிரதேசத்தை சேர்ந்தவர் அவர் தந்தை செங்கல் வியாபாரி கிர்வானியின் சாதனையை பாராட்டி மத்திய பிரதேச அரசும் 21 ஆயிரம் ரூபாய் ரொக்க பரிசு அறிவித்துள்ளது.

கிர்வானியின் சிறப்பான ஆட்டத்தைப்பாராட்டி உத்திரபிரதேச முதல்வர் வீர்பகதூர்சிங் 25ஆயிரம்ரூபாய் ரொக்க பரிசை அறிவித்துள்ளார்.

# அட்டகாசம் செய்யும் யானைகளை அடக்க முதுமலையிலிருந்து யானைகள் வரவழைப்பு

வேலூர். ஜன.16- பேரணாம்பட்டுவனப்பகுதிகளில் அட்டகாசம் செய்யும் யானைகளை அடக்க முதுமலையிலிருந்து யானைகள் வரவழைக்கப்படுகின்றன.

வடார்க்காடு மாவட்டத்திலுள்ள பேரணாம்பட்டுஅடுத்த தரங்கம்பேட்டை, குண்டலபல்லி, குடிபல்லி, அத்திருப்பம் அரவட்லா முதலிய இடங்களில் காட்டு யானைக்கூட்டங்கள் புகுந்து அட்டகாசம் செய்து வந்தன.

லட்சக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள கரும்பு, நெல், துவரை, தென்னை போன்ற பயிர்கள் காட்டு யானைகளால் அழிக்கப்பட்டன மேலும் மோர்தானாவில் பாலாஜி என்ற விவசாயியை யானை மிதித்து கொன்றதால் கிராமங்களில் இரவு நேரங்களில் விவசாயிகளும் பெண்களும் தூங்காமல் பயந்த நிலையில் இருந்தனர் எனவே கிராமமக்கள் மாவட்ட ஆட்சியர் தாசில்தார் ஆகியோர்களுக்கு மனுகொடுத்து உதவி கோரினார்கள்.

உடனடியாக மாவட்ட ஆட்சித் தலைவர் எஸ். மாலதி உதவி நடவடிக்கைகளில் ஈடுபட குடியாத்தம் தாசில்தார், குடியாத்தம் வனசரக அதிகாரி, பேரணாம்பட்டுவனவர் ஆகியோர்களுக்கு உத்தரவு இட்டார். மேலும் சென்னை கூடுதல் வனத்துறை தலைவர் என். அரிகிருஷ்ணன் வேலூர் மாவட்ட வன பாதுகாவலர் அருணாசலம் மாவட்ட வன அதிகாரிகள், ரெ. பிரகாசம், பகவன்சிங் ஆகியோர் பேரணாம்பட்டு பகுதிக்கு விரைந்து சென்று பார்வையிட்டு காட்டு யானைகளை அங்கிருந்து விரட்டுவதற்குரிய முயற்சியில் ஈடுபட்டனர்.

காட்டு யானைகளை மீண்டும் காட்டிற்குள் விரட்டுவதற்கு வேண்டிய முறைகள் மற்றும் ஊருக்குள் புகுந்து பயிர்களை நாசமாக்குவதை தடுப்பது பற்றியும் ஆலோசித்தனர் எனவே காட்டு யானைகளை விரட்டுவதற்காக முதுமலை காடுகளிலிருந்து நன்கு பழக்கப்படுத்தப்பட்ட இந்திரா முதுமலை என்ற 2 பெரிய யானைகள் மற்றும் 15 பாகர்களும் வரவழைக்கப்பட்டுள்ளனர். இந்த யானைகள் மூலம் அட்டகாசம் செய்யும் காட்டுயானைகள் காட்டுக்கு விரட்டப்படும். இதனால் கிராமமக்கள் பீதி அடையவேண்டாம் என காட்டு இலாகா அதிகாரிகள் கேட்டுக் கொண்டுள்ளனர்.

## சபரிமலையில் 2 கோடி பக்தர்கள்: மொத்த வருமானம் ரூ. 8 கோடி

சபரிமலை, ஜன 17. சபரி மலையில் உள்ள ஐயப்பன் ஆலயத்தில் மகா சங்கராந்தி தினமான வியாழனன்று பல்லாயிரக்கணக்கான ஐயப்ப பக்தர்கள் "ஜோதி தரிசனம்" செய்தனர். ஆலயத்தில் தீபாராதனை நடந்த பிறகு கீழ்வானத்தில் ஜோதி தரிசனம் காணப்பட்டது. பக்தர்கள் அந்த நேரத்தில் ஐயப்பனின் நாமகாணத்தை மெய்மறந்து பாடினர்.

மகா ஜோதியைக் காண தமிழ்நாடு ஆந்திரம், கர்நாடகம் மற்றும் மகாராஷ்டிரம் ஆகிய மாநிலங்களிலிருந்து ஏராளமான பக்தர்கள் வந்து குமியிருந்தனர்.

இந்த ஆண்டு மட்டும் சுமார் 2 கோடி பக்தர்கள் சபரிமலைக்கு வந்து ஐயப்பனை தரிசித்துவிட்டு சென்றுள்ளனர்.

இந்த ஆண்டு சபரிமலை ஐயப்பன் கோவிலுக்குசுமார் 8 கோடி ரூபாய் வருமானம் கிடைத்துள்ளது. திருவரங்கம் தேவஸ்தான தலைவர் பாஸ்கரன்நாயர் இதைத் தெரிவித்தார்.

சபரி மலை வரும் பக்தர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்து வருவதையொட்டி பக்தர்களின் வசதிகளை முன்னிட்டு கூடுதலாக சில காட்டுப் பகுதிகளை ஒதுக்கக்கோரிபிரதமர் ராஜீவ் காந்தியிடம் முறையிடப்போவதாக தேவஸ்தான அதிகாரிகள் கூறினர்.

# 'அண்ணா'- 'எம்.ஜி.ஆர்.'- 'ஜானகி': மூன்றெழுத்து மந்திரமே நாமறிவோம்



## அமைச்சர் அருணாசலம் பேச்சு

சென்னை. ஜன, 17 பேரறிஞர் அண்ணா நல்லாட்சி நடத்தினார், இதயதெய்வம் புரட்சித்தலைவர் எம் ஜி ஆர் நல்லாட்சி நடத்தினார் அந்த மூன்றெழுத்துத் தலைவர்களுக்குப்பின் ஆட்சிப்பொறுப்புக்கு வந்திருப்பவர் அன்னை ஜானகி இப்படிப்பட்ட மூன்றெழுத்து மந்திரங்களே நாங்கள் அறிவோம் என்று அமைச்சர் அருணாசலம் கூறினார்.

திருவள்ளுவர் தினவிழாவில் அமைச்சர் அருணாசலம் பேசியதாவது:-

நமது முதல்வர் ஜானகி எம்.ஜி.ஆர். தமது முதல் நிகழ்ச்சியாக திருவள்ளுவர் தின விழாவில் பங்கேற்றுள்ளார்.

வள்ளுவர் தன்னை உலகினிற்கே தந்து வான் புகழ் கொண்ட தமிழ்நாடு புகழ் பெற்றது போல உங்கள் புகழ் ஓங்கிநிற்கும்என்பதற்கு இதுவே சாட்சியாகும்.

அண்ணா என்ற மூன்றெழுத்து ஆட்சியை மூன்று எழுத்து கொண்ட எம்ஜிஆர் அமைத்தார் அந்த மூன்றெழுத்து மந்திரம் தான் எங்களுக்கு தெரியும்.

இப்போது ஜானகி என்ற மூன்றெழுத்து அம்மையாரின் ஆட்சி தொடங்கிவிட்டது.

புரட்சித்தலைவர் உருவாக்கிய கட்சி - அமைத்த ஆட்சி தொடர்ந்து நீடிக்க புரட்சித்தலைவரைச் கட்டிக் காட்டும் வகையில் ஜானகி ராமச்சந்திரன் ஆட்சிப் பொறுப்பேற்றுள்ளார்.

தமிழக வரலாற்றில்- உலக வரலாற்றில் ஜானகிராமச்சந்திரன் ஆட்சிப் புகழ் ஓங்கி வளர எல்லாரும் உறுதுணையாக நிற்போம்.

இவ்வாறு அமைச்சர் அருணாசலம் கூறினார்.

## மதுரை பத்திரிகையாளர்கள் இரங்கல்கூட்டம்

மதுரை, ஜன. 16- மதுரை பத்திரிகையாளர்கள் சங்கத்தின் நிர்வாகக்குழு சென்ற வியாழனன்று கூடி இதயதெய்வம் மறைவுக்கு ஆழ்ந்த அனுதாபம்தெரிவித்து தீர்மானம் நிறைவேற்றியது முதல்வரை இழந்து வாடும் அவரது குடும்பத்திருக்கு அனுதாபச்செய்தி அனுப்பப்பட்டது பத்திரிகைத் தொழிலுக்கு மறைந்த முதல்வர் ஆற்றிய சேவை குறித்து அப்போது பத்திரிகையாளர்கள் நினைவு கூர்ந்தனர்.

∴ அர்த்தநாரீசுவரர் என்பதுபோல புரட்சித்தலைவரின் சரிபாதி ஜானகி எம். ஜி. ஆர்.

∴ இந்திய ஒருமைப்பாடு, ஒற்றுமை இறையாண்மையைக்காத்து முதல்வர் ஜானகி எம்.ஜி.ஆர். வரலாறு படைப்பார்

∴ ஒளி தரும் அகல் விளக்காம் அன்னையை இனி ஜானகி எம்.ஜி ஆர். என்றே அழைப்போம்

## சூர்ப்பனகை ராஜ்யம் என்பது ஒருபோதும் இல்லை

# ராமராஜ்யத்திற்குபிறகு ஜானகி ராஜ்யம்

சென்னை, ஜன. 17 ஜானகித் தாயைவிட சிறந்த தாயை எங்கே காணமுடியும்? புரட்சித்தலைவரின் ராமராஜ்யத்திற்குப் பிறகு ஜானகி ராஜ்யம் நடக்கிறது. ஜானகி ராஜ்யமே நடக்கும் சூர்ப்பனகை ராஜ்யம் வராது; வரமுடியாது இந்திய மண்ணின் பாரம்பரியம் அதுதான். அது தான் இப்போது நடந்து கொண்டிருக்கிறது என்று விண்ணதிர எழுந்த கை தட்டல்கள், ஆரவாரங்களுக்கிடையில் அமைச்சர் ஆர் எம். வீ. சங்கநாதம் செய்தார்.

தமிழகத்தில் அன்னை ஜானகி எம் ஜி ஆருக்கு இருந்து வரும் ஆதரவுக்கு சாட்சி யமளிக்கிறவிழாவாக வள்ளுவா கோட்ட விழா அமைந்தது

வள்ளுவர் கோட்டத்தில் நடைபெற்ற திருவள்ளுவர் தின விழாவில் அமைச்சர் ஆர் எம் வீ பேசியதாவது

தமிழகத்தின் விடிவெள்ளியாம் பேரறிஞா அண்ணா அவர்கள் மறைந்த பிறகு தமிழகம் இருளில் தத்தளித்தது.

இதன் பிறகு தமிழகத்தின் கலங்கரை விளக்காக- ஒளி விளக்காக புரட்சித்தலைவர் விளங்கினார்.

அத்தகைய புரட்சித் தலைவர் நம்மை எல்லாம் அனாதைகளாக ஆக்கிவிட்டு நம்மை விட்டுப்பிரிந்து விட்டார்.

### ஒரேவாரிசு அன்னையே

தமிழ்ச்சமுதாயத்தின் வழிகாட்டியாக விளங்கிய புரட்சித்தலைவர் அமைத்த ஆட்சியை அவர் உருவாக்கிய கட்சியை நடத்திச் செல்வது யார் என்று தேடினோம்,

அண்ணாவுக்கு ஒரு இதயக்கனி கிடைத்தது போல தமிழகத்தின் நாயகன் புரட்சித்தலைவர் தனது ஒரே வாரிசு அன்னைஜானகி எம்ஜிஆர் தான் என்று சொல்லி விட்டார்

அன்னை ஜானகிஎம்ஜிஆர் நம்மை வழிநடத்திச் செல்லும் பொறுப்பை ஏற்றுள்ளார்.

அப்படிப்பட்டவர் ஆட்சிப் பொறுப்பை ஏற்றதும் தமது முதல் நிகழ்ச்சியாக அரசு நடத்தும் திருவள்ளுவர் தின விழாவில் பங்கேற்று தமது நிகழ்ச்சிகளை தொடங்கி இருக்கிறார். புரட்சித் தலைவர் பாதையில் செயல்பட்த் தொடங்கி இருக்கிறார்

திருவள்ளுவரைப் பற்றி எடுத்துச்சொல்ல திருக்குறளார் இருக்கிறார் அய்யா சிலம்புச்செல்வர் ம.பொ.சி இருக்கிறார்.

என்னைப் போன்றவர்கள் இந்த இடத்தில் திருக்குறளைப் பற்றிப் பேசமுற்பட்டால் கொல்லன் தெருவில் ஊசி விற்பது போல் ஆகும்.

திருவள்ளுவர் யாதும் ஊரே யாவரும் கேளிர் என்ற வழியில் சமயம்-ஜாதி- மொழிகளுக்கு அப்பாற்பட்டு உலகிற்குப் பொது மறையைத் தந்து இருக்கிறார் என்று அமைச்சா ப.உ.ச. கூறினார்.

புரட்சித்தலைவர் 10 ஆண்டு ஆட்சிகாலத்தில் தமிழுக்காக பல திட்டங்களை செயல்படுத்தினார்.

புரட்சித்தலைவர் தொடங்கிய அந்த சிறப்பை - மாண்பை நான் தொடர்கிறேன் என்று அறிவிக்கவே முதல்வர் ஜானகி எம் ஜி ஆர் இங்கு விழாவை தொடங்கி வைக்கிறார்.

இந்த நேரத்தில் சில [illegible] சொல்ல வேண்டியுள்ளது

நம்மை வழிநடத்திச் சென்ற புரட்சித்தலைவர் ஒளியாக இருந்தார் அந்த ஒளிக்குப்பிறகு அகல் விளக்காக அன்னை ஜானகி அம்மையார் முதல்வராக வந்துள்ளார் என்று அமைச்சர் ப உ ச கூறினார்.

அகல் என்று கூறியதற்கு கூட சிலர் வியாக்யானம் வெளியே சொல்ல முற்படுவார்கள்.

எம்.ஜி.ஆர். என்ற ஒளி இருந்த இடத்தில் ஜானகி என்ற அகல் விளக்குதானாக் என்றுசிலமேதாவிகள் கேட்கலாம்.

### சக்தியின் பெருமை

அகல் விளக்கின் சிறப்பு தாய்மார்களுக்குத் தெரியும்.

ஒரு அகல் விளக்கால் ஆயிரம் அகல் விளக்கை ஏற்ற முடியும் பல பல ஆயிரம் அகல்களை ஏற்ற முடியும் இதை நாடு பார்க்கத்தான் போகிறது.

[கை தட்டல்]

இருளைக்கிழித்து ஒளி பரப்ப ஒரு அகல் ஆயிரமாயிரம் அகல்களாகத் தோன்றும்

[பலத்த கை தட்டல்]

சக்தியின் பெருமை தாய்க் குலத்தினருக்குத் தெரியும் சக்தி இல்லையேல் சிவனே சும்மா இருப்பார் என்பார்கள்.

டெல்லியில் இருந்து வந்த இரு பத்திரிகையாளர்கள் தனித்தனியாக என்னைச் சந்தித்தனர்.

ஜானகி அம்மையாருக்கு எந்த தகுதி இருக்கிறதுஎன்று கேட்டார்கள்.

அவரது தகுதி ஆற்றல் எல்லாம் இனிமேல்தான் தெரியப்போகிறது நாட்டுக்குத் தெரியப்போகிறதுஎன்று பதில் சொன்னேன்.

### அன்னையின் உலகப்புகழ்

அவர்களுக்கு சென்னை கிரிக்கெட் பற்றிய உதாரணத்தைக் கூறினேன்.

சென்னை கிரிக்கெட்டில் இந்திய அணி வீரர் ஒருவர் அடிபட்டு விட்டதால் கிர்வானி சேர்க்கப்பட்டார்.

16 விக்கெட்டுகளை வீழ்த்திக் காட்டி மேற்கிந்திய அணியை இன்னிங்ஸ் தோல்வி என்ற அளவுக்கு தோல்வி பெற வைத்தார்.

கிர்வானியை உலகம் நேற்று வரை அறிந்து இருக்கவில்லை.

அதுபோலத்தான் ஜானகி அம்மையாரும் உலகம் புகழும் நிலைக்கு வருவார்.

[பலத்த கை தட்டல்]

புகழ்மிக்க ஒரு ஆணுக்குப் பின் புகழ் மிக்க மனைவி இருப்பார்.

கோடானுகோடி மக்களின் தலைவராக விளங்கிய புரட்சித்தலைவருக்கு 40 ஆண்டுகாலமாக கலை-அரசியல்சமுதாயத்தொண்டுகளில் இரண்டறக்கலந்து மிகச் சிறந்த மனைவியாக வளங்கியவர் ஜானகிஅம்மையார்.

புரட்சித்தலைவரது பணிகள் இலக்கியமாக மாற புரட்சித்தலைவர் பின்னால் அன்னை ஜானகி அம்மையார் இருந்தார்.

முதல்வராக வர ஏதேனும் இலக்கணம் இருக்கிறதா?

பல்கலைக்கழக பட்ட தகுதி இருக்க வேண்டுமா? வேறு ஏதாவது இலக்கண வரம்பு உள்ளதா?

1954ம் ஆண்டில் மூதறிஞர் ராஜாஜி இருந்த முதல்வர் இடத்திற்கு பெருந்தலைவர் காமராசர் வந்தார்.

ராஜாஜி இருந்த இடத்தில் காமராசரா என்று அன்று எழுதியவர்கள்தான் இன்றும் எழுதுகிறார்கள்.

33 ஆண்டுகளுக்குப் பிறகு புதிய அத்தியாயம் படைக்க புரட்சித்தலைவருக்குப் பிறகு ஜானகி அம்மையார் தொடங்கி இருக்கிறார்.

1977ல் புரட்சித்தலைவர் முதல்வராக வந்தபோதும் யார்? என்ன தகுதி என்று கேட்டார்கள்?

### எங்களின் சிறந்த தாய்

நாங்கள் விவரம் தெரிந்து சொல்கிறோம்.

40ஆண்டுகாலமாகஜானகி அம்மையாரை தாயாக தந்தையாக- தமக்கையாக தங்கையாக புரட்சித்தலைவரது உற்ற துணைவியாக பார்த்து வருகிறோம்.

ஜானகித்தாயை விட சிறந்த தாய் வேறு எங்கே கிடைப்பார்?

(பலத்த கைதட்டல்)

### ராமராஜ்யம் ஜானகிராஜ்யம்

ராமராஜ்யத்திற்குப் பிறகு ஜானகி ராஜ்யம் தான்வரும்,

கை தட்டல்

சூர்ப்பனகைராஜ்யம்வராது (நீண்ட நேரம் கை தட்டல்)

இது இந்திய மண்ணின் வழக்கம்,

(கைதட்டல்)

எங்கள் இதயத்தைக் குத்தி எங்கள் ரத்தத்தை ருசி பார்த்தாலும் புரட்சித் தலைவர் வழியில் பண்பைக் காப்போம்.

பகைவனுக்கு அருள் வழங்குவதுபோலபாதகர்களுக்கும் அருளும் அருளாளர் புரட்சித் தலைவர்.

### இருவரும் சரிபாதி

அவரது மறு பாதியாக ஜானகி எம்.ஜி.ஆர் இருக்கின்றார்.

ஜானகி அம்மையாரின் பாதியாக எம்ஜி ஆரும் எம். ஜி. ஆரின் பாதியாக ஜானகி அம்மையாரும் இருக்கிறார்.

ஆண்டவனையே அர்த்த நாரீசுவரா என்கிறோம்.

எங்கள் தலைவரை இழந்து தவிக்கும்எங்களுக்கு ஜானகி அம்மையாரை புரட்சித் தலைவரது பாதியாகவே பார்க்கிறோம்.

எங்கள் கழகத் தோழர்கள் புரட்சித்தலைவரை மறக்கும் நன்றிகொன்றவர்கள் அல்ல:

புரட்சித்தலைவரது மறு பாதியாக இருந்த அன்னையை "ஜானகி எம்.ஜி.ஆர்" என்றே அழைக்க விரும்புகின்றனர்.

[கை தட்டல்]

இப்படி அழைக்க அன்னை அனுமதி தரவேண்டும்.

[கை தட்டல்]

அமைச்சரவையில் பல போ மந்திரிகளாக வருவார்கள் என்று வெளியே சிலர் எழுதி வந்தனர் இப்போது ஆச்சரியப்படுகின்றனர்.

புரட்சித்தலைவர் யாராலும் கணிக்க முடியாதவர் அவரதுமறுபாதியானஜானகி எம் ஜி ஆரும் யாராலும் கணிக்கபடக்கூடியவர் அல்ல என்பதை தெரிந்து கொள்வார்கள்

### பணிகள் தொடரும்

எங்கள் நாயகன் விட்டுச் சென்ற பணிகளை முதல்வர் ஜானகி எம்.ஜி.ஆர். செயல் படுத்திக் காட்டுவார்

தமிழ் இனத்தின்மாபெரும் தலைவர் புரட்சித்தலைவர் விட்டுச் சென்ற பணிகளை ஜானகி எம்.ஜி.ஆர். அவர்கள் தொடர்வார்.

கட்சியையும், ஆட்சியையும் புரட்சித்தலைவர் உருவாக்கி புகழ் பெருமை சேர்த்தார்.

அந்த புகழ் பெருமை நிலைத்து நிற்க இந்த வள்ளுவர் விழாவை தொடங்கி வைத்த முதல்வர் ஜானகி எம்.ஜி.ஆர் அவர்களே வருக வருக என்று வரவேற்கிறேன்.

தமிழக மக்களையும் உலக தமிழர்களையும் வழிநடத்திச் செல்லுங்கள் அன்னையே என இருகரம்கூப்பி வணங்குகிறேன்.

புரட்சித்தலைவர் விட்ட இடத்தில் தமிழகத்தின் வரலாறு எழுதப்பட உங்கள் பணி தொடரட்டும்.

இந்திய நாட்டு ஒற்றுமை, ஒருமைப்பாடு, இறையாண்மைகாக்கப்பட தமிழக அரசை வழி நடத்திச் செல்ல கழகமும் லட்சோப லட்சம்தொண்டர்களும் உங்களுக்கு துணை நிற்பார்கள்.

[பலத்த கைதட்டல்]

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.



### உயர் நீதிமன்ற தலைமை நீதிபதியாக ரத்தினவேல் பாண்டியன்

சென்னை, ஜன, 17 சென்னை உயர்நீதி மன்ற தலைமை நீதிபதி எம்.என். சந்துார்கர்விடுமுறையில்செல்வதால் தலைமை நீதிபதியின் பொறுப்புகளை நீதிபதி ரத்தினவேல் பாண்டியன் கவனிப்பார் இதற்கான நியமன உத்தரவை ஜனாதிபதி வெங்கட்ராமன் பிறப்பித்திருக்கிறார்.

ரத்தினவேல் பாண்டியன் தலைமை நீதிபதியாக நாளை பொறுப்பு ஏற்றுக் கொள்கிறார். சந்துார்கர் விடுமுறை முடிந்து திரும்பும் வரை இந்த பொறுப்பில் ரத்தினவேல் பாண்டியன் இருப்பார்.

நீதிபதி ரத்தினவேல் பாண்டியன் நெல்லை கட்டபொம்மன் மாவட்டம் அம்பாசமுத்திரம் அருகிலுள்ள திருப்புடைய மருதுார கிராமத்தில் பிறந்தவர்.

## "மாதர்குல மாணிக்கமே வருக" மக்கள் உருக்கம்

சென்னை. ஜன. 17- முதல்வர் அன்னை ஜானகி எம்.ஜி.ஆர். திருவள்ளுவர் விழாவில் பங்கேற்க வள்ளுவர் கோட்டத்திற்கு நேற்று மாலை6-15மணிக்குவந்தார். அன்னைஜானகி எம்.ஜி. ஆர். வந்ததும் மண்டபத்திற்குள்ளும், வெளியேயும் நிரம்பி இருந்த மக்கள் வாழ்த்து முழக்கங்களை எழுப்பினர்.

'புரட்சித்தலைவரின் வாரிசே வருக' தமிழகத்தின் தனிப்பெரும் முதல் பெண் முதல்வர் அவர்களே வருக, வருக, என்று தாய்மார்கள் வாழ்த்து முழக்கங்களை எழுப்பினர். மாதர் குல மாணிக்கமே வருக என முழக்கமிட்டனர்.

அன்னை ஜானகிஎம்.ஜி. ஆருக்கு பூரண கும்ப மரியாதையுடன் சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது.

பள்ளி மாணவிகள் அன்னை ஜானகி எம்.ஜி.ஆர். வரும் பாதையில் மலர்களை தூவி வரவேற்றார்கள்.

மண்டபவாசலில் அமைச்சர்கள் ப.உ.ச. பொன்னையன், அருணாசலம் மற்றும் ஜேப்பியார் துறைமுகம்காஜா கு.க.செல்வம், ஜே. குமார் தி. நகர் மூர்த்தி. பிள்ளைப் பாக்கம் மூர்த்தி மற்றும் சீருடை அணிந்த தொண்டர் படையினர், இளைஞர் அணியினர் ஆகியோர் வரவேற்றனர்.

விழாவுக்கு வாரியத் தலைவர்கள் சுலோசனா சம்பத் செங்கம்ஜப்பார் நாகாமராசன், முத்துராமலிங்கம், பாவலர் முத்துசாமி கல்யாணிராமசாமி, அங்கமுத்து. சட்டமன்ற உறுப்பினர்கள் சைதை துரைசாமி தமிழ்மணி, மற்றும் சிதம்பரம், ஜெயராமன், கோவி. மணிசேகரன், நாமகிரிப் பேட்டை கிருஷ்ணன் பாபா ஜான் உள்பட திரளான அறிஞர்களும் உயர் அதிகாரிகளும் வந்திருந்தனர்,

வள்ளுவர் கோட்டம் நிரம்பி வழிந்து வெளியேயும் திரளான மக்கள் திரண்டு அன்னையின் உரையைக் கேட்டனர்.

## புரட்சித்தலைவரின் சரிபாதியான அன்னைக்கு வெற்றிமீதுவெற்றிவந்துசேரட்டும்

தமிழகத்தின் பத்தாவது முதல்வராக- முதல் பெண் முதல்வராக திருமதி. ஜானகி ராமச்சந்திரன் பொறுப்பேற்றுள்ளார்.

அரசியல் நெருக்கடிகள் சூழ்ந்துள்ள நிலையில் பொறுப்பேற்றுள்ள திருமதி ஜானகி பல பிரச்சினைகளை உடனடியாகச் சமாளித்தாக வேண்டியதிருக்கிறது.

முதல் பிரச்சினை - மூன்று வார காலத்தில் சட்டசபையில் தனது மெஜாரிட்டி பலத்தை நிரூபிப்பது.

இரண்டாவது, கட்சியில் ஏற்பட்டுள்ள பிளவைச் சரிப்படுத்துவது, தொண்டர்களைக் கட்டுக்கோப்பாக தனது பக்கம் வைத்துக் கொள்வது..

மூன்றாவது, தமிழக மக்களின் வாழ்க்கையை வளப்படுத்துகிற வகையில் ஆட்சிச் சக்கரத்தைச் சுழற்றுவது.

இதையெல்லாம் சாதிக்கிற ஆற்றல் நிச்சயமாக அவருக்கு இருக்கிறது என்று நாம் நம்புகிறோம், சோதனைகளையெல்லாம் சாதனைகளாக்கிய எம். ஜி. ஆரின் மறுபாதி என்கிற வகையில் அவரிடம் கற்ற அனுபவம், பிரச்சினைகளைச் சமாளிக்கிற ஆற்றலை அவருக்குத்தரும்.

முதல் ரவுண்டில் பெற்றுள்ள வெற்றியைத் தொடர்ந்து வெற்றி மீது வெற்றி பெற வாழ்த்துகிறோம்.

''இதயம் பேசுகிறது''

17.1.88 இதழ் தலையங்கம்

## அன்னை முதல்வர் பொறுப்பு ஏற்றது தமிழுக்கே சிறப்பு

### அமைச்சா பொன்னையன பேச்சு

சென்னை, ஜன. 17- அன்னை ஜானகி எம் ஜி ஆர் முதல்வராகப் பொறுப்பு ஏற்றது தமிழுக்கே கிடைத்த பெருமையாகும் என்று அமைச்சர் பொன்னையன் கூறினார்.



திருவள்ளுவர் தின விழாவுக்கு தலைமை வகித்து அமைச்சா பொன்னையன் உரையாற்றினார்,

அவர் பேசியதாவது:-

பொன்மனச்செம்மல் இதய தெய்வம் டாக்டர் புரட்சித் தலைவர் இன்று நம்மிடம் இல்லை என்ற சோக நிலையில் அவரது எண்ணங்களை கொள்கைகளை நிறைவேற்றும் முகத்தான் இந்த விழா இங்கு நடைபெறுகிறது.

கோடானு கோடி தமிழ் நெஞ்சங்களில் குடி கொண்ட அந்த உத்தமத் தலைவனின் கொள்கைகளை, நடைமுறை திட்டங்களை நிறைவேற்றி அவரது ஆன்மா சாந்தியடையத்தக்க வகையில் நாம் பணியாற்ற வேண்டும்.

அந்த வகையில் அவரது எண்ணங்களை நிறைவேற்ற அன்னை ஜானகி அம்மையார் தமிழகத்தின் முதல்வராக பொறுப்பேற்றுள்ளார்.

### தமிழுக்கு சிறப்பு

அந்தத்தாய் முதல்வராகப் பொறுப்பேற்று முதன் முதலாக திருவள்ளுவர் திருநாளில் பங்கேற்றுள்ளார்.

இதனால் திருக்குறளுக்குச் சிறப்பு தமிழ்த்தாய்க்கு சிறப்புச்சேர்த்த இதய தெய்வத்தின் துணைவியார் தமிழகத்துக்கு முதல்வரானது தமிழுக்கே சிறப்பாகும்.

2ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் சாதி,சமயமற்ற சமுதாயத்தை உருவாக்கி மதச் சார்பற்ற முறையில் குறளை வழங்கிய வள்ளுவர் வழியில் நமது இதய தெய்வம் தமிழகத்தை ஆண்டார்.

வள்ளுவர் கூறிய குறள் நெறிப்படி அரசியலுக்கும் இருக்கவேண்டும் என்ற நல்லஎண்ணத்தில் 11 ஆண்டுக்காலம் நல்லாட்சி புரிந்தார்.

### தெய்வீக ஒளிவிளக்கு

பாமர மக்களின் உழைப்பாளி மக்களின் உற்ற நண்பராக துாய எண்ணத்துடன் குறிப்பாக ஏழை எளிய தாய்மார்களின் உயர்வுக்கு தூய தொண்டாற்றிய தாய் உள்ளத்துக்கு சொந்தக்காரரான இதய தெய்வத்தின் உற்ற துணைவியார் அன்னை ஜானகி அம்மையார் முதல் முதலாக பங்கேற்கும் இந்த நிகழ்ச்சிபெருமைக்குரிய ஒன்றாகும்,

அவர் வழியில் தெய்வீக ஒளிவிளக்காக அன்னை ஜானகி அம்மையார் திகழ்கிறார்,

வள்ளுவர்வழியில் புரட்சித் தலைவர் செயல்பட்டார், 'எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப் பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவுஎன்ற வள்ளுவனின் வாக்குக்கு இலக்கணமாகத் திகழ்ந்தவர் இதய தெய்வம் புரட்சித்தலைவர் அவர்கள்.

எதிரிகளேபுகழும் வண்ணம் தன் வாழ்வை நடத்தி வந்தார். தன் சிறு வயதில் பட்ட இடர்ப்பாட்டை நினைத்துத்தான் தமிழ்த்தாய் பெற்றெடுத்த எந்தக் குழந்தையும் பசியோடு இருக்கக் கூடாது என்ற எண்ணத்தில் உதித்ததுதான் சத்துணவுத் திட்டம்.

முதல்வராகப்பொறுப்பேற்றதும், லண்டன் டைம்ஸ் நிருபர் ஏழை மக்களின் பிரச்சினையை பொருளாதார ரீதியில் எப்படி படிக்காத நீங்கள் நிறைவேற்றப் போகிறீர்கள் என்று கேட்டார்.

அதற்கு நமது இதய தெய்வம் நான் பொருளாதாரம் படித்தவனில்லை ஆனால் ஏழை எளிய மக்களின் உள்ளங்களை அறிந்தவன் பசியின் கொடுமையை அறிந்தவன்நான் ஏழ்மைஎன்றபள்ளியில் வறுமையைப்பற்றி படித்தவன் ஆகவே அந்த வறுமையைப்போக்க பாடுபடுவேன் என்றார்.

அதே போல் தமிழ்ச் சமுதாயத்தின் வறுமையை போக்கி நல்லாட்சி புரிந்தவர் இதய தெய்வம் புரட்சித் தலைவர் அவர்கள்.

தான் முதல்வராகப் பொறுப் பேற்றதும் அமைச்சரவைக் கூட்டத்திலும் அதிகாரிகளிடமும் ஏழை மக்களின் பசிப்பிணியைப் போக்க திட்டங்களை தாருங்கள் என்றார்.

அதற்கு அதிகாரிகள் நிதி இல்லை என்றனர். அன்றைக்கு மைய அரசும் நிதி இல்லை என்றது. அதற்குபின் இரண்டாவது முறையாக முதல்வராகப் பொறுப்பேற்றதும் சத்துணவுத் திட்டத்தை முதல்வர் புரட்சித் தலைவா அறிவித்தார்.

ரூபாய் 200 கோடி செலவில் சத்துணவுத் திட்டம் இன்று செயல்படுகிறது.

தனது ஆட்சிக் காலத்தில் வள்ளுவர் வாக்குப் படி பொய்மையை அழித்து, ஒருவரை ஒருவர் குறை சொல்வதை தவிர்த்து, பெற்றதாய் போல நம்மையெல்லாம் காத்தார்,

அவரோடு 45 ஆண்டுக் காலம் வாழ்ந்த அன்னை ஜானகி அம்மையார் வள்ளுவரின் துணைவியார் வாசுகி அம்மையார் போல புரட்சித்தலைவர் வழி நின்று நாலரைக் கோடி தமிழ் மக்களைக் காப்பாற்றுவார்.

அவர் ஆற்றும் தொண்டுகளுக்குநாம்துணை நிற்பதன் மூலம் இதயதெய்வத்தின் ஆன்மா சாந்தியடையும் என்று கூறி அமைகிறேன்.

இவ்வாறுஅமைச்சர் பொன்னையன் பேசினார்.

# அன்னை ஜானகியை ஆதரித்து புரட்சித்தலைவர் ஆன்மா சாந்தி அடையச்செய்வோம்

## சிலம்புச்செல்வர் ம.பொ.சி.உறுதி

சென்னை,ஜன. 17- அன்னை ஜானகி அம்மையாரை ஆதரித்து இதயதெய்வம் புரட்சித்தலைவர் ஆன்மா சாந்தி அடையச் செய்வோம் என்று சிலம்புச்செல்வர் டாக்டர் மபொசி கூறினார்.

இதயதெய்வத்தின் திரு உருவப்படத்தினை திறந்து வைத்து நா தழுதழுக்க ம,பொ.சி உரையாற்றினார்.

அவர் பேசியதாவது:

நம்மை மீளாத்துயரில் விட்டுவிட்டு அமரர் ஆகி விட்டார் புரட்சித்தலைவர்.

எம்.ஜி.ஆருக்கும் பின்னால் ''ஜானகி எம்.ஜி.ஆர்'' என்பதுதான் சரியானது.

முதல்வர்களில் முதல் பெண்ணாக தமிழகத்தை வாழவைக்க வந்திருக்கும் அன்னைஜானகி அம்மையார் திருக்குறளை தந்த திருவள்ளுவர் திருநாளில் பங்கேற்பது தாய்க்குலத்திற்கெல்லாம் பெருமை.

அமரர் புரட்சித் தலைவரது ஆட்சிக் காலத்தை ஒரு சகாப்தம் என்றே கூறலாம். அந்த அளவுக்கு அவர் செய்த சாதனைகளை பட்டியல் போட்டுக் காட்டலாம்.

முன்பு இருந்தவர்களைக் காட்டிலும் தனது சாதனையால் தனிஒரு சகாப்தமாகவே திகழ்ந்தார். அவர் வாழ்ந்த வாழ்க்கையை யாரும் அடையமுடியாது.

அவர் போன பிறப்பில் சக்கரவர்த்தியாகத்தான் பிறந்திருப்பார். அதை அவரிடமே நான் சொன்னதுண்டு.

அவர் தமிழுக்கு செய்யாத தொண்டில்லை,அவர் காலத்தில் தான் சக்ரவர்த்தி ராஜராஜசோழனின் ஆயிரமாவது ஆண்டுவந்தது. அந்த விழாவை பாரதப் பிரதமர் இந்திராகாந்தியை அழைத்து வந்து சிறப்பாகக் கொண்டாடினார்.

அதேபோல் தான் பாரதி ராஜாஜி பெரியார், க.சு. பிள்ளை. திரு. வி. க சுப்பிரமணியசிவா, வ.வே.சு. ஐயர் ரசிகமணி, டி கே சி ஆகியோருக்கு விழா எடுத்து மகிழ்ந்தார்.

அவர் ஆட்சிக் காலத்தில் தான் இவர்களுக்கு விழா கொண்டாடும் நாளும் வருகிறது.

அவரது இடத்தை பிடிக்க யாராலும் முடியாது சரித்திரம் காணாத தனிப்பெருந் தலைவர் புரட்சித் தலைவர்.

அவர் பழம்பெரும் தேசியவாதி மகாகவி பாரதிக்கு டெல்லியிலே சிலை வைத்தார்.

தெற்கையும் வடக்கையும் ஒன்றாக இணைத்தார் தெற்கே பிறந்த பாரதிக்கு வடக்கே டெல்லியில் சிலை வடக்கே பிறந்த நேருவுக்கு சென்னையில் சிலை இதைவிட தேசிய ஒருமைப்பாட்டுக்கு வேறு எந்த உதாரணத்தை சொல்வது.

எம்ஜிஆர் என்ற அதிசயப் மனிதரை ஆண்டவன் நமக்கு அனுப்பி வைத்தான். அதனால் தான் உலகத்தமிழ் மாநாடு. உலகத்தமிழ்ச்சங்கம் மகளிர்களுக்கு ஒருபல்கலைக் கழகம்-தமிழுக்கு ஒரு பல்கலைக் கழகம்- மறைந்த தலைவர்கள்பெயரில் மாவட்டங்கள்-பல்கலைக்கழகங்கள் பலகண்ட அந்த உத்தமனுக்கு டாக்டர் பட்டம் கொடுத்து மகிழ்ந்தது சென்னை பல்கலைக்கழகம்

மருத்துவப் பல்கலைக் கழகத்தை துவக்க பாரத ஜனாதிபதியை அழைத்து வந்து நாலரைக்கோடி தமிழ் மக்கள் சார்பில் பாராட்ட எண்ணியிருந்த புரட்சித் தலைவர், தனது தொண்டர்களையும் அழைத்து தனது பயணத்தைதொடர்ந்து விட்டார்.

முன்பு ஆட்சியில் இருந்தவர்கள்மக்கள் நலனடைய பல்வேறு திட்டங்களை கொண்டுவந்தார்கள்ஆனால் எதிர்கால குழந்தைகளை யார் நினைத்தார்கள்? புரட்சித்தலைவர் தான் நினைத்தார். சத்துணவைத் தந்தார்.

அவர் செய்ய நினைத்ததை செய்து முடித்த புண்ணியவான்.

அந்த புண்ணியவான் இன்று நம்மிடம் இல்லை. அவரது ஏகவாரிசாக அன்னை ஜானகி எம், ஜி. ஆரை விட்டுச் சென்றிருக்கிறார்.

(பலத்த கைதட்டல்)

அவர் விட்டுச் சென்ற பணியை தொடர நாம் எல்லோரும் ஏன்இந்த தமிழகமே அவர் பின்னால் நிற்கும்.

என்னை வாழ வைக்கும் தாய்க்குலமே என்று கூறிய டாக்டர் புரட்சித்தலைவர் அவர்கள் மறையவே இல்லை எந்தச் சூழ்நிலையிலும் தான் பேசி முடிக்கும் போது அண்ணாநாமம் வாழ்க என்று கூறாமல் இருக்க மாட்டார். அந்த அமரரை நாம் மறக்காது அன்னை ஜானகி அம்மையாரை ஆதரித்து அவரது ஆன்மா சாந்தியடையத் தக்க வகையில் பணியாற்றுவோம்.

இவ்வாறு ம.பொ.சி. உரையாற்றினார்.



### கோட்டாம்பட்டியில அஞ்சலி

மதுரை, ஜன. 16- மதுரை மாவட்டம் கொட்டாம்பட்டியில் இதயதெய்வத்திற்கு அஞ்சலி தெரிவித்து இரங்கற் கூட்டம் நடைபெற்றது.

ஊராட்சி ஒன்றியக்குழுத் தலைவர் நிகழ்ச்சிக்குத் தலைமைவகித்தார். நிகழ்ச்சியில் கே. எஸ். ஜெயிலானி ஏ.பொன்னையா, எம்.லட்சுமணன், ஆர்.எம். சண்முகம் எஸ்.என். இராசேந்திரன் எம்.எஸ், சாகுல்அமீது மற்றும் பலர் பங்கேற்றனர்.

# பொருளாதார நிபுணர் எல்.கே.ஜா. மறைவு

புதுடெல்லி,. ஜன. 17- பிரபல பொருளாதார நிபுணரும் அரசியல் மேதையுமான எல். கே, ஜா. பூனாவில் மரணம் அடைந்தார்.

பூனாவில் உள்ள தனியார் மருத்துவமனை ஒன்றில் அவர் கடந்த சில நாட்களாக சிகிச்சை பெற்று வந்தார்.

எல்,கே ஜாவின்மறைவுக்கு ஜனாதிபதி ஆர். வெங்கட்ராமன், பிரதமர் ராஜீவ் காந்தி ஆகியோர் ஆழ்ந்த அனுதாபம் தெரிவித்துள்ளனர்.

# இதயதெய்வம் விட்டுச்சென்ற கடமைகளை நிறைவேற்றியே தீருவோம்: அன்னை சபதம்

சென்னை, ஜன. 17- இதயதெய்வம் விட்டுச் சென்ற கடமைகளை தொடர்ந்து நிறைவேற்றுவோம் என்று அன்னை ஜானகி எம்.ஜி.ஆர். குறிப்பிட்டார்.



திருவள்ளுவர் தின விழாவில் முதல்வர் ஜானகி எம்.ஜி.ஆர் தமது பேச்சை துவக்கிய போது இங்கு கூடி இருக்கும் தாய்மார்களே பெரியோர்களே புரட்சித் தலைவரின் ரத்தத்தின் ரத்தமான உடன்பிறப்புக்களே என்றதும் கரஒலி மண்டபம் முழுவதும் எதிரொலித்தது.

முதல்வர் ஜானகி எம் ஜி ஆர் ஆற்றிய சிறப்புரை வருமாறு

உங்கள் அன்பாலும்ஆசியாலும் முதல்வர் பொறுப்பேற்ற பிறகு நான் பங்கேற்கும் முதல் அரசு நிகழ்ச்சி இது.

இங்கு நான் வந்து அமர்ந்தவுடன் என்னுடைய இதய தெய்வத்தின் நினைவுதான் வந்தது.

தமிழுக்கும்திருவள்ளுவருக்கும் தமிழ் அறிஞர்களுக்கும் புரட்சித்தலைவர் செய்த சிறப்புக்களை நாம் நினைத்துப்பார்க்கிறோம்.

### தமிழுக்கு தனித்துறை

தமிழ் வளர்ச்சி என்பதை அவர் வெறும் வார்த்தைகளுடன் நிறுத்தி விடவில்லை தமிழை வளர்க்க தனித்துறை நிறுவி வளர்த்தார்.

தைமாதம் 2ந்தேதி திருவள்ளுவர் தினவிழா அரசின் சார்பில் நடத்தப்படுகிறது.

இந்த விழாவில் தமிழ் அறிஞர்கட்கு உதவித்தொகை வழங்கி சிறந்த நூல்களுக்கும் பரிசுகளை வழங்கி வந்தார்.

உலகத் தமிழ் மாநாடு நடத்தியதுடன் உலகத்தமிழ் சங்கம் காணவும் ஏற்பாடு செய்தார்.

திருவள்ளுவர், பேரறிஞர் அண்ணாதிரு.விக பாரதியார் போன்ற சான்றோர்களின் பெயர்களில் விருதுகள் வழங்கவும் உத்தரவிட்டார்,

### நூற்றாண்டு விழாக்கள்

பல தமிழ் சான்றோர்களுக்கும் நூற்றாண்டுவிழாக்கள் நடத்த ஏற்பாடுகள் செய்தார்.

கவிஞர்களையும் அறிஞர்களையும் கவுரவிக்கும் வகையில் அரசு சார்பில் விழாக்கள் எடுக்க காரணமாக இருந்தவர் புரட்சித் தலைவர் தான்.

எங்கும்தமிழ்-எதிலும்தமிழ்-என்றும் தமிழ்-என்றபுரட்சித் தலைவரது லட்சிய வழியில் தமிழை வளர்த்திட இந்த நாளில் நாம் உறுதி எடுத்துக் கொள்வோம். (கைதட்டல்)

பிறமொழி ஆதிக்கத்தில் இருந்து தமிழைக் காப்பாற்ற வேண்டும் இது குறித்து விழிப்புடன் நாம் இருக்கவேண்டும்.

### தொடர்ந்து பாடுபடுவோம்

நமது இதய தெய்வத்தின் வழிநின்றுதமிழுக்குப், தமிழ் நாட்டுக்கும் தொடர்ந்து பாடுபடுவோம் என்பதை இந்த விழாவின் மூலம் தெரிவித்துக்கொள்வோம்.

இங்கு வீசியதமிழ்மணமும் குறள் மணமும் புரட்சித்தலைவரது புகழ் மணமும் என் மனப் புண் சற்றுஆறஉதவியது.

தமிழை வளர்க்க அறிஞர் பெருமக்களது அரிய யோசனைகளை வரவேற்கிறேன்.

உங்கள் அன்பாலும் ஆசியாலும் எனதுஇதயதெய்வம் விட்டுச்சென்ற கடமைகளை நிறைவேற்ற முடியும் என்று நம்புகிறேன்.

(கைதட்டல்)

அண்ணா நாமம் வாழ்க புரட்சித்தலைவர் புகழ் ஓங்குக.

இவ்வாறுமுதல்வர் ஜானகி எம் ஜி ஆர் கூறினார்.

# தெய்வமாக எங்களைவழி நடத்தும் புரட்சிதலைவர்

## செங்கை கலெக்டர் உருக்கம்

செங்கல்பட்டு- ஜன 17- இதயதெய்வம் புரட்சித் தலைவர் தெய்வமாக இருந்து எங்களை வழி நடத்திச் செல்கிறார் என்று கலெக்டர் பாண்டியன் உருக்கத்துடன் கூறினார்

வெளிநாட்டு சுற்றுலா பயணிகளை வரவேற்கும் வகையில் மாமல்லபுரத்தில் பொங்கல் விழா நடைபெற்றது. இந்த நிகழ்ச்சிக்கு மாவட்ட ஆட்சித்தலைவர் பாண்டியன் தலைமை வகித்தார் முன்னாள் அமைச்சா ஆனூர் ஜெகதீசன் விழாவைத் துவக்கி வைத்து போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்கு பரிசு வழங்கினார் நிகழ்ச்சியில் மாமல்லபுரம் நகர்ய துணைத்தலைவர்ஜனார்த்தனம். சென்னை செங்கை மாவட்ட கூட்டுறவு பால் ஒன்றியத் தலைவர் தி. க, நடராசன் செங்கை மாவட்ட அறங்காவலர் குழு தலைவர் தியாகராசன், உள்ளிட்டோர் பங்கேற்றுப் பேசினர்;

துவக்கத்தில் சுற்றுலா இயக்குநர் பி. செல்வம் அனைவரையும் வரவேற்றார் மாமல்லபுரம் சுற்றுலா அலுவலர் பாலுசாமி நன்றி கூறினார் விழா முடிவில் நடனமணிபாலு குழுவினரின்கலை நிகழ்ச்சியும் சுவர்ணமுகி குழுவினரின் பரத நாட்டிய நிகழ்ச்சியும் நடைபெற்றது:

இந்தநிகழ்ச்சியில் மாவட்ட ஆட்சித்தலைவர் பாண்டியன் பேசுகையில் புரட்சித் தலைவர்மறைந்து ஒருமாதம் கூட இன்னும் ஆகாதநிலையில் இந்த விழாவை நடத்த வேண்டியநிலையில் உள்ளோம் அவர் தெய்வமாக இருந்து எங்களுக்கு வழி காட்டுவார் என்றுகூறினார்.



# மில் துணியை தோற்கடிக்கும் கைத்தறி துணி

சென்னை, ஜன. 17- மில்துணியை தோற்கடிக்கும் புதுவகை பாலியஸ்டர் துணிகளை தமிழக கைத்தறித் துறை உற்பத்தி செய்துள்ளது. எளியமக்கள் வாங்கும் வகையில் இவை மலிவு வகையில் கிடைக்கின்றன,

பாலியஸ்டர் இழையை பயன்படுத்தி புதுவகை உயர்தர 'சுஸ்மான்' என்னும் கைத்தறி ரகத்தை தமிழக 'கோ ஆப்டெக்ஸ்' நிறுவனம் முதன் முறையாக அறிமுகப் படுத்தியுள்ளது இதன் துவக்க விழா சென்னையில் நடைபெற்றது.

தமிழ்நாடு கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்க ''கோ-ஆப்டெக்ஸ்'' தனி அதிகாரி அனகாபுத்தூர் ராமலிங்கம் தலைமை வகித்தார். ''கோ ஆப்டெக்ஸ்'' மேலாண்மை இயக்குனர் ஏ.பி. பட்டிகர் வரவேற்றுப் பேசினார்.

''சுஸ்மான்'' புதுரக துணியை கைத்தறி நெசவாலை மற்றும் கதர்துறை ஆணையாளர் அகமது வெளியிட்டார்.

திரைப்பட நடிகர் மோகன் துணியை பெற்றுக் கொண்டார்.

மத்திய அரசு கைத்தறி வளர்ச்சி துணைஆணையர் சிறப்புரை ஆற்றினார்.

அனகாபுத்தூர் ராமலிங்கம் பேசுகையில் கூறியதாவது:

இதயதெய்வம் புரட்சித் தலைவர் கைத்தறி துறையில் மிகுந்த அக்கறை செலுத்தி வந்தவர் கைத்தறி நெசவாளர்களுக்கு பல்வேறு உதவிகளை அவர் செய்தார்.

கைத்தறி நெசவாளர்களின் வாழ்க்கைத்தரம் முன்னேற்றம் அடைய பல்வேறு முன்னோடி திட்டங்களைத் தீட்டி செயல்படுத்தியவரும் புரட்சித்தலைவர் தான்.

இவ்வாறு அனகாபுத்தூர் ராமலிங்கம் கூறினார்.

மத்திய அரசு கைத்தறித் துறை துணை ஆணையர் பி,ராமமூர்த்தி பேசுகையில் கூறியதாவது:-

இந்தியாவிலேயே தமிழ் நாடுதான் முதன் முதலாக 'பாலியஸ்டர், சுஸ்மான் துணியை தயாரித்துள்ளது.

### வழிகாட்டும் தமிழகம்

கைத்தறித் துறையில் பல்வேறு சிறப்பான திட்டங்களைத் தமிழகம் தான் செயல் படுத்தியுள்ளது.

கைத்தறித்துறையில் இந்தியாவில்உள்ள பல்வேறு மாநிலங்களுக்கும் தமிழ்நாடுதான் முன்னோடியாக இருந்து வருகிறது,

இவ்வாறு பி. ராமமூர்த்தி கூறினார்.

தமிழக அரசு கைத்தறித் துறைஇயக்குனர் கே. மலைச்சாமி பேசுகையில் கைத்தறி துறையின் பல்வேறு சீரிய திட்டங்களை விளக்கினார். மில்துணிகளை தோற்கடிக்கும் வகையில் 'சுஸ்மான்' உயர்ரக பாலியஸ்டர் துணி அமைத்துள்ளது. என்றும் அவர் கூறினார்.

''கோ ஆப்டெக்ஸ்'' நிறுவனத்தின் முதன்மை மேலாளர் வு. சீதாராமன் நன்றி கூறினார்.





Edited and published by K. RAVINDRAN on behalf of Thangamani Publication and Printed by all India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson manickam Road, MADRAS. 600 029.

## பொது [இராணுவம்]த் துறை

அரசு ஆணை எண் 1935
நாள் 25-11-87
அண்ணா, நாள் 30-11-87
பக்கம் 4

### பிழை திருத்தம்

| புல எண் | காலம் எண் | விளம்பரத்தில் இருப்பது | இருக்க வேண்டியது |
|---|---|---|---|
| 28-3ஏ1பி1 | 2 | 1. டையோசியன் பொருளாளர் மற்றும்சொத்து அதிகாரி கதீட்ரல் சாலைசென்னை | 1, டையோசியன் பொருளாளர் மற்றும் சொத்து அதிகாரி சி .எஸ். ஐ மஷன் கதீட்ரல் சாலைசெனை-86 |
| | | 2. ஜார்ஜ் | 2, ராஜா |
| 28-3ஏ1பி2 | 2 | 1. டையோசியன் பொருளாளர் மற்றும் சொத்து அதிகாரி பெந்த கோஸ்தே மிஷன் கதீட்ரல் சாலை சென்னை | 1. டையோசியன் பொருளாளர் மற்றும் சொத்து அதிகாரிசி. எஸ். ஐ மிஷன் கதீட்ரல் சாலை சென்னை-86 |

லால் ராவ்ணா சைலோ
கூடுதல் செயலாளர்
பொதுத்துறை
சென்னை-600009

DIPR-18NA-88-Maa



## சமூக நலத் துறை

அரசாணை நிலை எண் 44
நாள் 14-1-88
நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் 6-ம் பிரிவின் கீழான விளம்பல்

### அறிவிக்கை

கீழ்க்காணும் விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள நிலங்களை ஒரு பொதுநோக்கத்திற்காக கையகப் படுத்த வேண்டியுள்ளதென்று தமிழ்நாடு அரசு மனநிறைவடைந்திருப்பதோடு, அந்நிலங்களுக்கு வழங்கப்பட வேண்டிய இழப்பீட்டுத்தொகை முழுவதும் பொது வருவாய்களிலிருந்து செலுத்தப்பட வேண்டும் என்றும் அவ்வரசால் ஏற்கனவே முடிவெடுக்கப்பட்டுள்ளது ஆகவே 1894ஆம் ஆண்டைய நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் (மையச்சட்டம் 1-1894) 6-ம் பிரிவின்படி தமிழ்நாட்டு ஆளுநர் அவர்கள் கீழ்க்காணும்விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ளதும் 0.46.5 எக்டேரைக் கொண்ட அதே அல்லது சற்று கூடுதலாகவோ குறைவாகவோ பரப்பளவு உள்ளதுமான நிலங்கள் ஒரு பொது நோக்கத்திற்காக அதாவது குருபரஹள்ளி கிராம சலவை தொழிலாளிகள் மற்றும் முடிதிருத்துவோர் பிற்படுத்தப்பட்டோர் வீட்டுமனைக்காக தேவைப்படுகிறது என்று இதன் மூலம் அறிவிக்கிறார்.

இந் நிலங்களின் வரைபடங்கள் அரூர் தனி வட்டாட்சியர் ஆதிதிராவிடர் நலம் அலுவலகத்தில் வைக்கப்பட்டுள்ளது. அவற்றை அலுவலகப்பணி நேரத்தில் எப்போது வேண்டுமானாலும் பார்வையிடலாம்.

விவர அட்டவணை

தர்மபுரி : மாவட்டம் — அரூர். வட்டம்
குருபரஹள்ளி கிராமம்

| நன்செய் (அ) புன்செய் என்ற நிலத்தின் விவரிப்பும் புல எண்ணும் | நிலச் சொந்தக்காரரின் (பட்டாதாரரின்) அல்லது அனுபவதாரரின் பெயர் | கையகப்படுத்த உள்ள பரப்பளவு ஹெக்டேரில் | குறிக்கத் தக்க ஏதேனும் [மரங்கள், கட்டிடங்கள், கிணறுகள் முதலியவை] |
|---|---|---|---|
| அரசு புன்செய் புலஎண், 96.5பி. | அருணாசலக் கவுண்டர் மக்கள் 1, அண்ணாமலை 2, ஆண்டி | 0.46.5 | மாம்கிணறு கட்டிடம் ஏதுவும் இல்லை. |
| | மொத்த பரப்பு | 0.46,5 | ஹெக். |

சோ குமாரசுவாமி
அரசு துணைச் செயலாளர்
சமூக நலத்துறை

DIPR-9-DPI-88-RPS சென்னை-9



தமிழ்நாடு அரசு அலுவலர் கழக மாவட்ட தலைவர்கள் ஏ. ஆர் சுந்தர்ராஜ், பி செல்வராஜ், பி. ராமலிங்கம் கோவிந்தசாமி, சீனிவாசன் ஆகியோர் முதல்வர் ஜானகி எம்ஜிஆரை சந்தித்து பேசியபோது எடுத்த படம்

### ஆதரவு இழந்த நிலையில்

# பதவி வெறியால், ஆளுநர் மீது பாயும் துரோக கும்பல்

தமிழகத்தின் முதல்வராகி மந்திரிசபை அமைக்கும் வாய்ப்பை திருமதி வி. என். ஜானகிக்கு அளித்த கவர்னரின் நடவடிக்கை கடுமையான விமர்சனத்திற்குள்ளாகி இருக்கிறது கவர்னரின் நடவடிக்கையை விமர்சனம் செய்பவர்கள் எழுப்பும் முக்கியமான கேள்விகள்: ஏற்கெனவே முதல்வராக நியமிக்கப்பட்டுவிட்ட நெடுஞ்செழியனே தனது மெஜாரிட்டி பலத்தை சட்டசபையில் நிருபிப்பதற்கு கவர்னர் வாய்ப்பு அளித்திருக்க வேண்டாமா? ஆளுங்கட்சியில் அதிக எம்.எல்.ஏ.க்கள் அவர் பக்கம் இருந்தாலும், சட்டசபையில் மெஜாரிட்டி இருக்கிறது என்று நிருபிக்காத நிலையில், ஜானகிராமச்சந்திரனை பதவியேற்க கவர்னர் அழைத்தது எப்படி சரியாகும்?

இந்த விமர்சனங்களில் கோபம் இருக்கும் அளவிற்கு, நியாயம் இல்லை என்றுதான் நமக்கு தோன்றுகிறது.

நெடுஞ்செழியனுக்கு முதல் வாய்ப்பை கவர்னர் அளித்திருக்க வேண்டும் என்ற கோரிக்கையில் வலுவில்லை.

எம். ஜி. ஆர். மரணத்தை யொட்டி நெடுஞ்செழியனை தற்காலிகமுதல்வராகத்தான் கவர்னர் நியமித்தார் தற்காலிக முதல்வர்" என்ற வார்த்தை அரசியல் நிர்ணயச் சட்டத்தில் இல்லாவிட்டாலும், அச்சட்டத்தின் கீழ் இந்த நாற்பது ஆண்டுகளில் ஏற்கப்பட்டுவிட்ட மரபுகளில் இதுவும் ஒன்று அப்படி நியமிக்கும் போதே 'புதிய தலைவர் தேர்ந்தெடுக்கப்படும் வரை" என்ற நிபந்தனையும் கவர்னர் விதித்தார். அந்த நிபந்தனைக்குட்பட்டுத்தான் நெடுஞ்செழியனும் பதவியேற்றார்.

## அறிவிப்பு ஏன்?

தனது நியமனத்தின் தற்காலிகத் தன்மையை நெடுஞ்செழியன் பரிபூரணமாக உணர்ந்திருந்தார் அவருடைய ஆதரவாளர்களும் உணர்ந்திருந்தனர் அ.இ.அ.தி.மு.க எம். எல். ஏக்கள் ஒரு தலைவரை தேர்ந்தெடுத்த பிறகு அவர் தான் முதல்வராகப பதவி ஏற்க வேண்டும் என்பதையும் அவர்கள் அறிந்திருந்தார்கள் அதனால்தான் நெடுஞ்செழியன் தான் போட்டியிடப் போவதாக அறிவித்தார் தனக்கு எம்.எல் ஏ.க்களின் ஆதரவு உண்டு என்றும் கூறினார் தன்னைத் தலைவராகத் தேர்ந்தெடுப்பது கட்சிக்கும் ஆட்சிக்கும் நல்லது என்று விளக்கம் கொடுத்தார் ''தலைவரை தேர்ந்தெடுக்க எம் எல் ஏக். களின் கூட்டம் எப்போது கூட்டப்படும்'' என்று அவரிடம் கேட்கப்பட்டபோது கூட அவர் 'அம்மாதிரி கூட்டத்திற்கு அவசியம் இல்லை என்று கூறவில்லை தேதியை நிச்சயமாகச் சொல்ல முடியாது' என்றுதான் கூறினார்.

தான் எதிர்பார்த்தபடி காரியங்கள் நடக்காத போது தான் நெடுஞ்செழியனின் நிலையில் மாற்றம் ஏற்பட்டது தாங்கள் கணக்கிட்டபடி எம் எல் ஏக்களின் ஆதரவைத்திரட்ட முடியாது என்று புரிந்து கொண்ட பிறகுதான் அவருடைய ஆதரவாளர்களின் வாதங்கள் மாறுபட ஆரம்பித்தன கவர்னரைப் பொறுத்த அளவில் அவர் தனது கடமையை ஒழுங்காகவே செய்திருக்கிறார்.

நெடுஞ்செழியன் அறிக்கைகளை விட்டுக் கொண்டிருந்தாரே தவிர தான் முதல்வராக தொடர்வதே எல்லாருக்கும் நல்லது என்று தானே கண்டுபிடித்து கூறிக் கொண்டிருந்தாரே தவிர தனக்கு எம்.எல்.ஏக்களின் ஆதரவு உண்டு என்பதை அவர் காட்டவில்லை 'நான் சட்டசபையில் காட்டு கிறேன்' என்று மட்டும் கூறினார். இதை அவர் என்ன நீங்களும் நாமும் கூடச் சொல்லலாம்.

### எம். எல். ஏ.க்கள் ஓடிவருவார்கள் என்ற ஆசை

'புதிய தலைவர் தேர்ந்தெடுக்கப்படும் வரை' என்ற நிபந்தனைக்குட்பட்டு பதவியில் அமர்ந்தவருக்கு தன்னுடைய பலத்தைக் காட்ட சட்டசபையைச் சந்திக்கும் வாய்ப்பை கவர்னர் வழங்கிஇருக்க முடியாது எப்படியாவது அந்த வாய்ப்பை பெற்று விட்டால் வேறு வழியில்லாமல் எம் எல் ஏக்கள் பயந்து தங்கள் கோஷ்டியின் பக்கமே ஓடிவந்துவிடுவார்கள் என்று நெடுஞ்செழியன் ஆசைப்பட்டிருக்கிறார்.

அதாவது தங்கள் கோஷ்டியின் எம் எல் ஏக்களை இழுக்கும் முயற்சிக்கு கவர்னர் உதவ வேண்டும் என்று அவர் எதிர்பார்த்திருக்கிறார் அது நடக்காமல் போகவே, கவர்னரின் நடவடிக்கையை அந்தக் கோஷ்டியினரும் அவருடைய ஆதரவாளர்களும் விமாசனம் செய்கிறார்கள் கவர்னர் எடுத்த உடனே சட்டசபையை எப்படிக்கலைப்பது என்பதற்கு வழிகளைத் தேட முடியாது அதே போல சட்டசபையை சஸ்பெண்ட்செய்து வைக்க ஏதாவது சாக்கு கிடைக்காதா' என்று அவர் அலையவும் கூடாது. ஒரு மந்திரி சபை பதவியேற்று நிர்வாகம்நடத்தவழி செய்ய முயற்சிப்பதுதான் அவருடைய முதல் கடமை சட்டசபையில் தனக்கு தன் கட்சியின் 70 எம்.எல்.ஏக்களின் ஆதரவு நிச்சயமாக உண்டு என்றுநெடுஞ்செழியன் கூறிக் கொண்டிருந்தார் ஆனால் வீரப்பனோ, வி.என். ஜானகிக்குத் தங்கள் கட்சி எம் எல் ஏக்கள் 97 பேர்களின் ஆதரவு உண்டு என்று கவர்னரின்எதிரிலேயே நிருபித்துக் காட்டினார் கவர்னர் தனித்தனியே விசாரித்து அவர்களுடைய ஆதரவை அறிந்து கொண்டார். அதன் பிறகும் நெடுஞ்செழியன், '70 எம். எல்.ஏக்களின் ஆதரவு தனக்கு இருக்கிறது' என்று கூறிக்கொண்டிருந்தது விந்தையிலும் விந்தை.

## கவர்னரின் கடமை

சட்டசபையின் நம்பிக்கையைப் பெறக்கூடியவர் என்று தான் நினைப்பவரை முதல்வராக நியமிப்பதுதான் அரசியல் சட்டப்படி கவர்னரின் கடமை அதனால்தான் ஒவ்வொரு சட்டசபையிலும் மெஜாரிட்டி கட்சியின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுகிறவரை கவர்னர் அழைக்கிறார். இப்போதும் கவர்னர் ஆளும் கட்சியின் சட்டசபை அங்கத்தினாகள், தங்கள் தலைவரை விரைவில் தேர்ந்தெடுக்க வேண்டும்" என்றுதான் கேட்டார்.

இரண்டுகோஷ்டிகள்ஆளுக்கொரு தலைவரைத் தேர்ந்தெடுத்தன. இந்த இருவரில் ஒருவரை கவர்னர் அழைக்க வேண்டும். யாரை அழைப்பார்? 97 பேரால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஜானகியையா, அல்லது 34 பேரால் தேர்ந்தெடுக்கப்பட்டு, அந்த 34 பேரைக்கூட நேரில் காட்டாமல் ''70'', என்று கூறிக் கொண்டிருந்த நெடுஞ்செழியனையா?

சட்டசபையில் இருப்பதற்குள் அதிக பலம் வாய்ந்த குரூப் வி. என். ஜானகி அம்மையாருக்கே இருக்கிறது. என்பது கவர்னரின் எதிரில் நிதர்சனமாக காட்டப்பட்டது தனிப்பட்ட முறையில் அதிக பலம் வாய்ந்த குருப்பைத் தன் வசம் வைத்திருந்த வி. என். ஜானகிக்குச் சட்டசபையில் தனது பலத்தைக்காட்ட வாய்ப்பளிக்க கவர்னர் இந்த நிலையில் தான் முடிவெடுத்தார். இதுஜனநாயக மரபுகளுக்கு ஏற்ற செயல் தான்.

### எம். எல். ஏ. ஆதரவு யாருக்கு?

ஜானகியின் ஆதரவாளர்கள் கூட்டிய கூட்டம் அகில இந்திய அண்ணா தி. மு. கழக விதிமுறைகளின்படி செல்லுமா, செல்லாதா என்பது கவர்னரைப் பொறுத்தவரையில் அனாவசியமான விவகாரம் எம். எல். ஏ.க்களின் ஆதரவு யாருக்கு என்பதைத்தான் அவர் பார்க்க முடியும். அதைத்தான் அவர் செய்திருக்கிறார்.

தன் கட்சியைச்சேர்ந்த 97 பேர் தவிர வேறுஆதரவும் தனக்கு சட்டசபையில் இருக்கிறது என்று காட்டுமாறு ஜானகியிடம் கவர்னர் கூறி இருக்க வேண்டாமா? என்ற கேள்வியும் சிலரால் கேட்கப்படுகிறது மொத்தம் 223ல் 112 பேரின் ஆதரவு தனக்கு உண்டு என்று ஜானகி நிருபிக்காத நிலையில் கவர்னர் அவருக்கு சந்தர்ப்பம் அளித்திருக்கக் கூடாது என்பது இவர்களின் வாதம் 64 எம் எல் ஏக்களைக் கொண்ட இ. காங்கிரசின் ஆதரவு யாருக்கு என்பது நிச்சயமாகாதநிலையில்இருப்பதற்குள் சட்ட சபையின் நம்பிக்கையைப் பெறக் கூடிய வாய்ப்பு அதிகமாகப் பெற்றிருப்பவரை கவர்னா அழைத்திருக்கிறார். ''யாருக்குமே வாய்ப்புஇல்லை'' என்று கூறி சட்ட சபையை சஸ்பெண்ட் செய்வதோ, கலைப்பதோ வேறுவழியே இல்லாத நிலையில் எடுக்கப்பட வேண்டிய நடவடிக்கைகள்.

ஜானகிராமச்சந்திரனால் சட்ட சபையின் நம்பிக்கையைப் பெறமுடியாமல் போனால் அந்த அவசியம் எழலாம் ஆனால்அதற்கு முன் மந்திரிசபை அமைத்து நிர்வாகம் நடத்தப்படுவதற்கு இருக்கும் ஒரு வாய்ப்பை கவர்னர் உதறித் தள்ளக்கூடாது.

ஒன்று வேண்டுமானால் சொல்லலாம். சட்டசபையின் அங்கீகாரத்தைப் பெற வி என் ஜானகி அம்மையாருக்கு மூன்று வார அவகாசம் கொடுக்காமல் இன்னும் குறைவாகக் கொடுத்திருந்தால் அது முற்றிலும் நியாயமாக இருந்திருக்கும். ஆனால் இதிலும் கூட கவர்னரின் எதிரே இருந்தது இரண்டு கோரிக்கைகள் ஒன்று நெடுஞ்செழியனுடையது மற்றது வி.என். ஜானகியுடையது.

### வீண் சவடால்

நெடுஞ்செழியன்காலப்போக்கில் சட்டசபையில் என் பலத்தை நிருபிப்பேன் என்று தான்கூறிக்கொண்டிருந்தார் வி.என்.ஜானகி அம்மையாரோ மூன்று வார காலவரையறையை ஏற்பதற்கு தயாராக இருந்தார்.

கவர்னர் கொடுத்த மூன்று வார அவகாசம் அதிகமானது என்று சொல்லும் அருகதையும், காலவரையறையின்றி அவகாசம் எதிர்பார்த்த நெடுஞ்செழியன் தரப்பிற்குக் கிடையாது. தங்களுக்கு 34 எம்.எல்.ஏ.க்களின்ஆதரவே இருந்தாலும் சட்டசபையை சந்திக்கும் வாய்ப்பு எப்படியாவதுகிட்டியிருந்தால் மற்றவர்களும் ஓடிவந்திருப்பார்களே காங்கிரசும் ஆதரவு தெரிவித்திருக்குமே சமாளித்து விட்டிருக்கலாமே! கவர்னர் அந்த வாய்ப்பு இல்லாமல்செய்துவிட்டாரே? என்ற ஆத்திரத்தில் நெடுஞ்செழியன் தரப்பினர் கவர்னரின் நடவடிக்கையை எதிர்க்கிறார்கள்.

நெடுஞ்செழியன் முதல்வராக நீடித்திருந்தால் அரசின் ஆதரவோடு ஜெயலலிதா தன்னை ஸ்திரப்படுத்திக் கொண்டிருப்பாரே வெகு சீக்கிரத்தில் அவரே முதல்வராக பதவி ஏற்றிருப்பாரே அந்த வாய்ப்பு இல்லாமல் போய்விட்டதே என்ற ஆத்திரத்தில் ஜெயலலிதாவின் ஆதரவாளர்கள் கவர்னரைத் தாக்கிப்பேசுகிறார்கள் எழுதுகிறார்கள். இதுதான் உண்மை. கவர்னரைப் பொறுத்தவரையில் எடுத்த எடுப்பில் சட்டசபையைச் சஸ்பெண்ட் செய்யாமல் அல்லது கலைக்காமல் ஒருமந்திரி சபையை நியமித்து நிர்வாகம் நடத்த முயற்சிக்கும் தனது கடமையை அவர் செய்திருக்கிறார் இருப்பதற்குள் யாருக்கு வாய்ப்பு அதிகம் என்று அவர் கண்எதிரில் நிருபித்துக் காட்டவே அவரை அழைத்திருக்கிறார்.

மாறுபட்டு வரும் அரசியல் சூழ்நிலைகளால் வி என் ஜானகியினால் சட்ட சபையின் அங்கீகாரத்தைப் பெற முடியாமல் போனாலும் கூட கவர்னரின் இந்த நடவடிக்கை தவறானதாகிவிடாது. நமது நாட்டில் கவர்னர்கள் ஒழுங்கான நடவடிக்கை எடுப்பது என்பது அத்திபூத்தார் போல் நடக்கும் விஷயம் அப்படி ஒரு முறை நடந்திருக்கிறது. அதையும் எதிர்ப்பது நியாயமல்ல.

துக்ளக்
Vol. XVII No. 15.1.88
காரியாலயம் 57 மவுண்ட் ரோடு சென்னை 600 002

## தமிழ் நாடு மின்சார வாரியம்

பொதுக் கட்டுமான வட்டம்
பேசின் பாலம் மின்நிலைய வளாகம்,
பேசின் பாலம், சென்னை-600 012.

### ஒப்பந்தப்புள்ளி அறிவிப்பு

தமிழ்நாடு மின்சார வாரியத்தின் சார்பாக கீழ்க்கண்ட வேலைகளுக்கு மூடி அரக்கு முத்திரையிடப்பட்ட தனித் தனியான ஒப்பந்தப்புள்ளிகள் கீழ்க்கையொப்பமிட்டவரால் வரவேற்கப்படுகின்றன.

| வ. எண். | விவரக்குறிப்பிடுகையின் எண் | வேலையின்பெயர் | ஒப்பந்த வகை | செலுத்த வேண்டிய வைப்புத் தொகை |
|---|---|---|---|---|
| 1. | 67-87-88 பொ.க.வ. சென்னை. | அதியமான் கோட்டை 110 கி. வோ துணைமின் நிலையத்தில் இரண்டு குடியிருப்புகள் அடங்கிய மூன்று பிளாக் 'பி' வகை கட்டிடங்கள் கட்டுவது சம்பந்தமாக. | L.S. | ரூ. 3,100- |
| 2. | 68-87-88 பொ.க.வ சென்னை | அதியமான் கோட்டை 110 கி.வோ துணை மின் நிலையத்தில் இரண்டு குடியிருப்புகள் அடங்கிய இரண்டு பிளாக் 'Q' வகைகட்டிடங்கள்கட்டுவது சம்பந்தமாக | L.S. | 2,400- |
| 3. | 69-87-88 பொ.க.வ சென்னை | அதியமான் கோட்டை 110 கி.வோ துணை மின் நிலையத்தில் ஒரு 'R' வகை குடியிருப்பும் மற்றும் ஒரு 'S' வகை குடியிருப்பு கட்டிடங்கள் கட்டுவது சம்பந்தமாக | L.S. | 1,800 |
| 4 | 70-87-88 பொ.க.வ. சென்னை | அதியமான்கோட்டை 110கி.வோ. துணை மின்நிலையத்தில் ஒரு உதவி கோட்டப் பொறியாளர் அலுவலகம் கட்டுவது சம்பந்தமாக | L.S. | 1,600- |

ஒப்பந்தப் புள்ளிகள் பெற்றுக்கொள்வதற்கான கடைசி நாளும் நேரமும்.: வரிசை எண் 1முதல் 4வரை 2.2.1988 மாலை 3.00மணி வரை

| வ. எண். | விவரக்குறிப்பிடுகையின் எண் | வேலையின்பெயர் | ஒப்பந்த வகை | செலுத்த வேண்டிய வைப்புத் தொகை |
|---|---|---|---|---|
| 5. | 71-87.88 பொ.க.வ. சென்னை | ஒசூர் 230 கி.வோ. துணை மின் நிலையத்தில்ஒரு 'T' வகை குடியிருப்பு கட்டிடம் கட்டுவதுசம்பந்தமாக | L.S. | 1,500- |

ஒப்பந்தப் புள்ளிகள் பெற்றுக் கொள்வதற்கான கடைசி நாளும் நேரமும்: 3-2-1988மாலை 3.00 மணி வரை

| வ. எண். | விவரக்குறிப்பிடுகையின் எண் | வேலையின்பெயர் | ஒப்பந்த வகை | செலுத்த வேண்டிய வைப்புத் தொகை |
|---|---|---|---|---|
| 6. | 72-87-88 பொ க வ சென்னை | ஒசூர் 230 கி. வோ. துணை மின் நிலையத்தில் இரண்டு குடியிருப்புகள் அடங்கிய ஒரு பிளாக் 'P'வகை கட்டிடம் கட்டுவது சம்பந்தமாக | L.S. | ரூ.1200- |
| 7. | 73-87.88 பொ க வ சென்னை | திருவளம்-மோசூர் 230 கி.வோ. இரட்டைமின் பாதையில் தடம் எண் 46 முதல் 76(மூன்றாம் பகுதி - செங்கநத்தம்-மேல் வெங்கட்டாபுரம்)வரையிலான மின் கோபுரம் அமைக்கும் பணியில் குழி தோண்டி அடித்தளம் சிமெண்ட் காங்கிரீட்டில் பதிவு செய்து எர்த் செய்து மண்ணை நிரப்புதல் சம்பந்தமாக | K.2 | ரூ.3200 |

ஒப்பந்தப்புள்ளிகள் பெற்றுக்கொள்வதற்கான கடைசி நாளும் நேரமும் 4-2-1988 மாலை 3 மணி வரை

| வ. எண். | விவரக்குறிப்பிடுகையின் எண் | வேலையின்பெயர் | ஒப்பந்த வகை | செலுத்த வேண்டிய வைப்புத் தொகை |
|---|---|---|---|---|
| 8. | 74-87-88 பொ க வ சென்னை | திருவளம் - மோசூர் 230கி.வோ. இரட்டை மின் பாதையில் தடம் எண். 77 முதல் 107 (நான்காம்பகுதிமேல் வெங்கட்டாபுரம் அயில்) வரையிலான மின்கோபுரம் அமைக்கும்பணியில் குழி தோண்டி அடித்தளம் சிமெண்ட் காங்கிரீட் பதவு செய்து எர்த் செய்து மண்ணை நிரப்புவது சம்பந்தமாக | K.2 | ரூ.2,400- |

ஒப்பந்தப்புள்ளிகள் பெற்றுக்கொள்வதற்கான கடைசி நாளும் நேரமும்: வரிசை எண் 7 முதல் 8 வரை 4.2.1988 மாலை 3.00 மணிவரை.

விவரக்குறிப்பிடுகை ஒவ்வொன்றின் விலை தமிழ்நாட்டில் ரூ. 30-ம் தமிழ்நாட்டின் வெளியே அனுப்ப ரூ. 33-ம் ஆகும்.

விவரக் குறிப்பிடுகைகள் யாவும் ஒப்பந்த அறிவிப்பில் கண்டுள்ளபடி அவைகள் பெற்றுக்கொள்வதற்கான கடைசி நாளுக்கு முதல் நாள் பிற்பகல் 4-00 மணிவரை விற்பனை செய்யப்படும்.

விவரக்குறிப்பிடுகைகளுக்கான விலையை பணமாகவோ அல்லது பணச் செலுத்துகை மூலமாகவோ, கணக்கு அதிகாரி, பொதுக்கட்டுமான வட்டம், பேசின் பாலம் மின் நிலைய வளாகம், பேசின்பாலம் சென்னை-600 012 அவர்களுக்கு அனுப்பி விவரக்குறிப்பிடுகைகளை பெற்றுக் கொள்ளவும். அஞ்சலில் அனுப்பி வைக்கப்படும் குறிப்பிடுகை வந்து சேராவிட்டாலோ அல்லது காலதாமதம் ஏற்பட்டாலோ இவ்வாரியம் பொறுப்பேற்காது.

விவரக்குறிப்பிடுகை பெறுவதற்காக செலுத்தப்பட்ட பணம் எக்காரணம் கொண்டும் திருப்பி அளித்திடவோ அல்லது வேறு வகையில் சரிசெய்திடவோ இயலாது.

மேற்பார்வைபொறியாளர்
பொதுக்கட்டுமான வட்டம்

பேசின்பாலம்
மின்நிலைய வளாகம்
பேசின்பாலம்
சென்னை-600 012

டி.ஐ.பி.ஆர்-66-எம்.எஸ்-88-ஏடி

# 72-லிருந்து இரத்தம் சிந்தி வளர்த்த கழகத்தை அழிக்க உங்களுக்கென்ன உரிமை?

## அடங்காப்பிடாரிகட்கு சைதை மோகன் கண்டனம்

சென்னை, ஜன. 17 இரத்தத்தாலும், வியர்வையாலும் புரட்சித்தலைவரின் லட்சோப லட்சம் தொண்டர்கள் உருவாக்கிய இயக்கத்தில் பதவி சுகத்துக்காக வந்த ராசாராமுக்கும், நெடுஞ்செழியனுக்கும் என்ன உரிமை இருக்கிறது என்று சைதை மோகன் கேட்டுள்ளார்.

சென்னை 147வது வட்ட செயலாளர் என். எஸ். மோகன் விடுத்துள்ள அறிக்கை வருமாறு:-

இதய தெய்வம் டாக்டர் புரட்சித்தலைவர் இரக்கத்தால் ஈர நெஞ்சத்தால், தமிழகத்து மக்கள் நெஞ்சங்களில் தூங்காவிளக்காக, விளங்கி இரத்தம் சிந்தி வளர்த்த இயக்கத்தை இரத்தம் குடிக்கும் ஓநாய்கூட்டம் அழிக்க துடிப்பது வேடிக்கையாக உள்ளது.

### பதவி பித்தர்கள்

புரட்சித்தலைவரின் தயவால் பதவி சுகம் பெற்ற நெடுஞ்செழியன் அறிக்கைகளுக்குமேல் அறிக்கைவிடுவது சிந்துபாத் கதை படிப்பது போல் உள்ளது.

இவருக்கும், மன்றத்துக்கும் கட்சிக்கும் என்ன தொடர்பு உள்ளது? ஒட்டு உறவாவது உண்டா?

ராசாராமுக்கு இந்த இயக்கத்தை பற்றி குறைகூற என்ன யோக்யதை உண்டு கருணாநிதியால் ஒதுக்கித் தள்ளப்பட்ட குப்பைத் தொட்டிகள் இன்று இதய தெய்வம் உருவாக்கிய இயக்கத்தை சிதைக்க முயலுகின்றன.

இதய தெய்வத்தை இமை போல் காத்த அன்னை ஜானகியை குறைகூற ஜெயலலிதா கும்பலுக்கு என்ன யோக்யதை உண்டு.

புரட்சித்தலைவரது இயக்கம் கங்கையை போன்றது அதில் கூவத்தை கலக்கவிட மாட்டோம்.

இவ்வாறு மோகன் கூறி உள்ளார்.

# வாரியார் விருந்து: லலிதா கும்பலின் அரசியல் அட்டூழியம்

திருமுருக கிருபானந்த வாரியார் பொங்கல் விழாவன்று சென்னை முத்துக்குமாரசுவாமி (கந்தசாமி) கோவிலில் "கந்தன் கருணை" சொற்பொழிவு நடத்தினார் அவற்றிலிருந்து எடுக்கப்பட்ட சிலகருத்துக்கள்:

'பகலில் எமன் வந்தால் மக்கள் பிரார்த்தனை நடத்தி உயிரைக் காத்துக் கொள்கிறார்கள் எனவே எல்லோரும் தூங்கும் போது நள்ளிரவு 3 மணிக்கு வந்து எமன உயிரைத் திருடிச் சென்று விடுகிறான் எவ்வளவு கொடுமை இது'

ஃ ஃ ஃ

"பதவி ஆசை அங்கும், இங்கும் ஓட வைக்கும் சிலரை ஓட்டவும் வைக்கும் பஞ்சு போல் பறக்க வைக்கும் எம். எல். ஏ. க்களை இங்கிருந்து வடக்கே இந்தூர் வரை அழைத்துச் செல்ல வைக்கும்'

-வாரியார் சுவாமிகள்

### கொடிநாள்

தஞ்சை, ஜன. 17- தஞ்சையில் கொடிநாள் நிகழ்ச்சி கடந்த 11ந் தேதி நடைபெற்றது- மாவட்ட ஆட்சித் தலைவர் ராமு இந்த கூட்டத்தில்பங்கேற்றார்.

தஞ்சையிலுள்ள முன்னாள் ராணுவத்தினர் மாளிகை 20 லட்ச ரூபாய் செலவில் விரிவுபடுத்தப்படுமென மாவட்ட ஆட்சித் தலைவர் ராமு கூறினார்.

# பிப்ரவரி 3-ம்தேதிக்குள் புதிய குடும்பஅட்டை:

சென்னை, ஜன. 17-

சென்னைநகரிலும் புறநகர் பகுதிகளிலும் புதியகுடும்ப கார்டுகள் இம்மாதம் 19 ம் தேதி முதல் பிப்ரவரி 3ம் தேதிக்குள் வழங்கப்படும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

இந்தப் புதிய குடும்ப அட்டைகள் தற்போது உணவுப் பொருட்கள் வாங்கும் சில்லறைக் கடைகளிலேயே வழங்கப்படும்.

காலை8மேணி முதல்மாலை 6மேணி வரை புதிய கார்டுகள் வழங்கப்படும்.

தண்டையார்பேட்டை, பெரம்பூர் பகுதிகளில் 19, 20,21 தேதிகளில் வழங்கப்படும்.

பரங்கிமலை ஜி.டி. பகுதிகளில் 22. 23. 24. தேதிகளில்வழங்கப்படும்.

அண்ணாநகர், அம்பத்தூர் பகுதிகளில் 25.27,28, தேதிகளில் வழங்கப்படும்.

திருவல்லிக்கேணி தியாகராயநகர் பகுதிகளில் 29,30, 31ஆகிய நாட்களில் வழங்கப் படும்.

மயிலாப்பூர், புரசைவாக்கம், பகுதிகளில்பிப்ரவரி 1,2, 3,தேதிகளில் வழங்கப்படும்.

















# பூரண கும்பம் எடுத்து ஜானகி எம். ஜி. ஆருக்கு தாய்க்குலம் வரவேற்பு

சென்னை ஜன 17- முதல்வர் பொறுப்பு ஏற்றபின் அரசின் முதல் பொது நிகழ்ச்சியில் பங்கேற்க வந்த அன்னை ஜானகி எம் ஜி ஆருக்கு தாய்மார்கள் ஆரத்தி எடுத்து வரவேற்பு அளித்தனர்.

முதல்வர் ஜானகி எம்.ஜி. ஆர் தாது முதல் பொது நிகழ்ச்சியாக திருவள்ளுவா தின விழாவில் பங்கேற்று சிறப்புரை ஆற்றினார்.

விழா நடந்த வள்ளுவர் கோட்டம் உள்ளேயும் வெளியேயும் பல்லாயிரக்கணக்கில் மக்கள் குழுமி இருந்தனர்.

இதயதெய்வம் புரட்சித் தலைவர் இருந்த போது எப்படி மக்கள் கூட்டம் இருக்குமோ அதே போல முதல்வர் ஜானகிஎம்.ஜி ஆர் நிகழ்ச்சிக்கும்மக்கள்வந்திருந்தனர்.

விழா நடந்த வள்ளுவர் கோட்டம் வண்ணச்சர விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டு இருந்தது முகப்பில் பேரறிஞர் அண்ணா இதய தெய்வம் புரட்சித்தலைவர் ஆகியோரது உருவங்கள் வண்ணவண்ண சரவிளக்குகளால்உருவாக்கப்பட்டு வைக்கப்பட்டு இருந்தன.

சாலைகளில் கழகக்கொடி தோரணங்கள், ஒளி வண்ணங்களில் இரட்டை இலைகள் அலங்காரம் கண்ணைக் கவரும் வகையில் இருந்தது.

விழாவில் பங்கேற்க வந்த மக்கள் அரங்கத்தின் உள்ளே நிறைந்து வழிந்து நின்றனர். வெளியே சாலைகளிலும் மக்கள் கூட்டம் இருந்தது.

## மலர் தூவினர்

முதல்வர் ஜானகி எம். ஜி. ஆர். விழாவுக்கு வந்த போது பெண்கள் தேங்காய் மாவிலைகளை வைத்து பூரண கும்பம் கையில் ஏந்தி ஆரத்தி எடுத்து மலர் தூவி வரவேற்றனர்.

வண்ண வண்ண உடைகள் அணிந்த சிறுமியர் இரு பக்கமும் அணிவகுத்து நின்று மலர் தூவி வரவேற்றனர்.

மேடைக்கு முதல்வர் ஜானகி எம்.ஜி.ஆர் வந்ததும் மக்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்து கரஒலி எழுப்பினா.

எல்லோருக்கும் கரம் கூப்பி அன்னை ஜானகி எம்.ஜி.ஆர் வணக்கம் தெரிவித்தார் அப்போது கரஒலி அலை அலையாக எழுந்தது

விழாவுக்கு அமைச்சா பொன்னையன் தலைமை வகித்தார் தமிழ்வளர்ச்சித் துறை செயலாளர் எஸ்.டி காசிராஜன் வரவேற்றார்.

## வாழ்த்து குவிந்தது

மேடையில் இருந்த முதல்வர் ஜானகி எம். ஜி ஆருக்கு சிலம்புச் செல்வா டாக்டர் ம.பொ.சியும் திருக்குறளார் முனுசாமியும் நேரில் வாழ்த்து தெரிவித்தனர்,

அமைச்சர் அருணாசலம், திருக்குறள் முனுசாமி ஆகியோர் பேசிய பிறகு திருவள்ளுவர் படத்தை அமைச்சர் ப.உ.ச. திறந்து வைத்தார்,

பேறிஞர் பெருந்தகை அண்ணாவின் படத்தை அமைச்சர் ஆர்.எம்.வீ திறந்து வைத்து உரை ஆற்றினார்.

தமிழகத்தின்காவல்தெய்வமாம் ஏழுகோடிதமிழர்களின் நெஞ்சங்களில் நீங்காமல் நிலைத்து நிற்கும். இதய தெய்வத்தின் திருவுருவப் படத்தை தமிழ் வளர்ச்சி உயர்மட்டக் குழு தலைவர் அய்யா ம.பொ.சி. திறந்து வைத்துப் பேசினார். புரட்சித்தலைவரைப்பற்றி அவர் பேசியது எல்லோரது நெஞ்சையும் நெகிழ வைத்தது.

அமைச்சர் ஆர்.எம்.வீ. உணர்ச்சி உரை ஆற்றினார்.

இதன் பிறகு முதல்வா ஜானகி எம். ஜி ஆர். தமது பொன்னுரையை வழங்கினார்.

முதல்வர் ஜானகி அம்மையார் பேசியபோது மக்கள் தங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்தும் வகையில் கரஒலி செய்தனர்.

இதன் பிறகு முதல்வர் ஜானகி எம் ஜி ஆர் விருதுகளை வழங்கினார்.

மகாவித்வான் ச. தண்டபாணி தேசிகருக்கு பொன்னாடை போர்த்தி திருவள்ளுவா விருதை வழங்கி ரூபாய் 10 ஆயிரத்தையும் வழங்கினார்.

சிறந்த நூலாசிரியர்கள் 34 பேர்களுக்கு பரிசும், பாராட்டு பத்திரங்களையும் வழங்கினார்.

அகவை முதிர்ந்த 27 தமிழறிஞர்கட்கு மாதம் ரூபாய் 250 வீதம் உதவித் தொகையும் வழங்கினார்.

பாவேந்தர்பாரதிதாசனின் பேத்தி அமுதவல்லி முதல்வர் ஜானகி எம்.ஜி.ஆருக்கு பொன்னாடை போர்த்தினார்.

விழா முடிந்து வெளியே வந்தபோது மக்கள் தந்த மனுக்களையும் முதல்வர் ஜானகி எம் ஜி.ஆர் பெற்றுக் கொண்டார்.

## புரட்சித்தலைவர் டாக்டர் எம். ஜி. ஆர் பரிசு

சென்னை ஜன 17-

அடுத்த ஆண்டு முதல் புரட்சித்தலைவர் டாக்டா எம் ஜி ஆர் பரிசு என்ற பெயரில் ரூபாய் இருபத்துஐந்து ஆயிரம் மதிப்பில் இரண்டு பரிசுகள் அறிவியல் நூல்களுக்கு வழங்கப்படுகிறது முதல்வர் அன்னை ஜானகி எம்ஜிஆர் இதற்கு உத்தரவிட்டுள்ளார் என்று அமைச்சர் பொன்னையன் அறிவித்தார்

திருக்குறள் முனுசாமி திருக்குறள் நெறி பரப்பும் மையத் தலைவர் பணியில் தொடர்ந்துபணியாற்றமுதல்வா ஆணை பிறப்பித்துள்ளார் என்றும் அமைச்சர் பொன்னையன் அறிவித்தார்.

## பட்டுக்கோட்டை அழகிரி போக்குவரத்து கழகத்திற்கு மத்திய அரசு விருது

புதுடெல்லி, ஜன. 17 1986 87-ம் ஆண்டில் போக்குவரத்து துறையில் அகில இந்திய அளவில் தமிழ்நாடு பட்டுக்கோட்டை அழகிரி போக்குவரத்துகழகம் உற்பத்தி திறனில் முதலிடம் பெற்றதாக தேர்ந்தெடுக்கப்பட்டது.

இதற்கான விருது வழங்கும் விழா டெல்லியில் நடைபெற்றது ஜனாதிபதிஆர்.வெங்கட்ராமன் விழாவில் கலந்து கொண்டு அவ்விருதை வழங்கினார். பட்டுக்கோட்டை அழகிரி போக்குவரத்துக் கழக தலைவர் பாஸ்கரா விருதைபெற்றுக்கொண்டார்

# நலிவுற்ற பிரிவினருக்கு அரசின் உடனடி உதவி: ஜானகி எம்ஜிஆர் முடிவு

## அமைச்சர் வி. வி. சுவாமிநாதன் அறிவிப்பு

சென்னை, ஜன 17 திதிராவிட, மிகவும் பிற்பட்டோர் நலிந்த மெலிந்த பிரிவினர், விதவைகள், தாய்மார்கள் ஆகியோர்க்கு அரசின் சலுகைகள் போர்க்கால வேகத்தில் சென்றடைய முதல்வர் ஜானகி அம்மையார் செயல்பட முடிவெடுத்திருக்கிறார் என்று அமைச்சா வி வி சுவாமிநாதன் அறிவித்துள்ளார்

திருவள்ளுவர் திருநாள் காலை 9.00 மணிக்கு பேரா விழா மயிலாப்பூரில் நேற்று சிரியர் அ. ஞானசம்பந்தம் தலைமையில்நடந்தது. சட்டமன்ற உறுப்பினர்கள் வளர்மதி மற்றும் தமிழ்மணி, அறநிலையத்துறை ஆணையாளர் கல்யாணசுந்தரம், இ ஆ. ப மற்றும் பலர் வந்திருந்தனர். அப்பொழுது அறநிலையம் மற்றும் சுற்றுலாத்துறை அமைச்சர் வி. வி சுவாமிநாதன் பேசியதாவது:-

### தமிழனின் மதம்

தமிழர்களின் வேதம் என்று கருதக்கூடிய அளவுக்கு வீட்டில் உள்ளவர்களும் நாட்டில் உள்ளவர்களும் எப்படி வாழ வேண்டும் என்று இலக்கணம் வகுத்தது தான் திருக்குறள் ஆகும். தாமம் எல்லோருக்கும் பொதுவானது. அதில் பேதம் கூடாது. ஔவையார் கூட ஆண், பெண் என்று மனிதகுலத்தை இரு குலமாக பிரித்தார். ஆனால் வள்ளுவர்பெருமான் ஆண்,பெண் என்றபாகுபாடு செய்யாமல் எல்லோரும் ஓர் குலம். எல்லோரும் ஓர் இனம் ஒருவனே தேவன் என்று கற்பித்தார். நாமம், ரூபம், வர்ணம் இல்லாதவன் இறைவன் என்று அற்புதமாக வர்ணித்தார். அவர் மொழிந்தவைகளையே தமிழர்களின் மதம் என்று சொல்லலாம்.

### ஜானகி எம்.ஜி.ஆர் போர்க்கால நடவடிக்கை

தமிழ்நாட்டில் முதன் முதலாக அன்னை ஜானகி எம் ஜி.ஆர் தாய்க்குலத்தின் பிரதிநிதியாக முதலமைச்சராக பொறுப்பேற்று இருக்கிறார் பல்வேறு சமுதாய நல அபிவிருத்தி திட்டங்கள் போர்க்கால நடவடிக்கையில் எடுக்கப்படவேண்டும் குறிப்பாக ஆதிதிராவிடர் மிகவும் பிற்பட்டோர். நலிந்த மெலிந்த பிரிவினர் விதவைகள், தாய்மார்கள் போன்றவர்களுக்கு அரசின் சலுகைகள் போய் சேரவேண்டியதில் அமைச்சர்கள் அக்கறையுடன் செயல்படவேண்டும் என்று அண்மையில் நடந்த அமைச்சரவைக் கூட்டத்தில் முதலமைச்சர் அறிவுரை கூறினார்.

1952ஆம் ஆண்டு பொதுத் தேர்தலில் மிகப்பெரும்பான்மையான ஓட்டுக்களை அன்றைய காங்கிரஸ் பெறவில்லை. ஆனால் அதிகமாக அதிகமான வாக்குகளைப் பெற்றஒரே கட்சி காங்கிரஸ் தான்என்று ராஜகோபாலாச்சாரியாரை அமைச்சரவை அமைக்கஅன்றையசென்னை மாநில ஆளுநர் பிரகாசா கேட்டுக் கொண்டார்

அப்பொழுது இராஜகோபாலாச் சாரியார் சட்டசபை உறுப்பினராகவோ அல்லது மேல்சபைஉறுப்பினராகவோ இல்லைபிரகாசாராஜாஜியை அமைச்சரவை அமைக்க கூப்பிட்ட கடிதத்தில் நிபந்தனை ஏதும் கூறவில்லை. அப்பொழுது மொழிவாரி மாகாணங்கள் தமிழ்நாடு ஆந்திரம் கேரளம் கர்நாடகம் என்று பிரியாமல் இருந்த சென்னை மாநில சட்டசபையின்மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கை 375 ஆகும். அதன்படி மெஜாரிட்டி 188(187+1)பெறவேண்டும்

ஆனால் காங்கிரஸ் ராஜாஜியை முதலமைச்சராக கொண்டு அமைச்சரவை அமைக்க முன்வந்தபோது சட்டமன்ற உறுப்பினர்கள் எண்ணிக்கையை பெரிதுபடுத்தவேயில்லை.

இப்பொழுதுள்ள ஆளுநாகுரானா தமிழ்நாட்டின் அமைச்சரவையை அமைக்க முதல்வர் ஜானகி எம் ஜி ஆர் அவர்களுக்கு அனுப்பிய கடிதத்தில் நிபந்தனையை விதித்தார் சட்டசபையை மூன்று வாரத்திற்குள் கூட்ட வேண்டும் அதில் மெஜாரிட்டி பலத்தை நிரூபிக்கவேண்டும் என்று கேட்டுக் கொண்டார் ஜானகிஎம்ஜிஆர் அவர்களும் மூன்று வாரத்திற்குள் கூட்ட இருக்கிறார்.

ஆனால் ராஜகோபாலாச்சாரியாரோ ஒன்றரைமாதம் கழித்துதான் சட்டசபை கூட்டத்தை கூட்டினார். இப்பொழுது அன்னை ஜானகி எம் ஜி ஆர் நம்பிக்கை தீர்மானம் கொண்டுவருவதுபோல் அன்றைய சென்னை மாநில சட்டசபையில் தீர்மானம் கொண்டு வந்தார். அன்றைய தினம் 'இந்து' போன்ற பத்திரிகைகளோ அல்லது அரசியல் ஆருடம் கூறுபவர்களோ ராஜாஜி தலைமையில் காங்கிரசுக்கு அன்றைய தினம் சட்டசபையில் 188உறுப்பினர்கள் ஆதரவு இல்லையே என்று கூற முன் வராததற்கு என்ன காரணம் என்றுதெரியவில்லை.

இன்றைய தினம் அன்னை ஜானகி எம் ஜி ஆருக்கு தமிழ் நாடு சட்டசபையில் மிக அதிக உறுப்பினர்கள் பலம் வாய்ந்த அனைத்திந்திய அண்ணா திமுகழக கட்சியில் மூன்றுக்கு இரண்டு பங்குக்கு மேல் நியமன உறுப்பினர் உள்பட பார்வாடு ப்ளாக் உறுப்பினர்கள் தருகிற ஆதரவை நீக்கி 98 உறுப்பினர்கள் பலம் பொருந்திய அமைச்சரவையை தூஷிப்பது அதர்மமாகும்

1952ல்நம்பிக்கை தீர்மான வாக்கெடுப்பில் ராஜகோபாலாச்சாரியார் காங்கிரஸ் பெற்ற வாக்குகள் 152 தான் அன்றைய காங்கிரஸ் கட்சி சட்டசபை மொத்த எண்ணிக்கையில் 375ல்பாதிக்குமேல்(187+1) 188உறுப்பினர்கள் ஆதரவை பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

எனவே வள்ளுவர் வாழ்ந்த தமிழ்நாட்டில் வள்ளுவர் பிறந்த தலைநகர் சென்னையில் தர்மத்தை எல்லோருக்கும் பொதுவாக போதித்த வள்ளுவர் வழிநின்று விருப்பு வெறுப்பின்றி கடைபிடிக்க வேண்டும் என்று வேண்டி விரும்பி கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் வி. வி. சுவாமிநாதன்பேசினார்.



## தமிழக மோட்டார் சைக்கிள் ஜெர்மனிக்கு ஏற்றுமதி

சென்னை, ஜன 17- தமிழகத்திலிருந்து ஆயிரம் மோட்டார் சைக்கிள்கள் ஜெர்மனிக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

தமிழகத்திலுள்ள என்பீல்டு நிறுவனம் மேற்கு ஜெர்மனிக்கு 1 கோடி ரூபாய் மதிப்புக்கு மோட்டார் சைக்கிள்கள் ஏற்றுமதி செய்கிறது இந்த மோட்டார் சைக்கிள்கள் இம்மாத இறுதிக்குள் ஏற்றுமதி செய்யப்பட உள்ளது.

## பூங்கா நகரில் ஏழைகளுக்கு அன்னதானம்

சென்னை, ஜன. 17- இதயதெய்வத்தின் பிறந்த நாளையொட்டி பூங்கா நகரில் 2ஆயிரம் ஏழைகளுக்கு அன்னதானம் வழங்கப்பட்டது

பூங்கா நகர் 57வது வட்டம் நவரத்தினம் எம்.ஜி.ஆர். மன்ற சார்பில் இந்த அன்னதான நிகழ்ச்சி நடைபெற்றது. மன்ற செயலாளர் முருகேசன் தலைமையில் நடைபெற்ற இந்த நிகழ்ச்சியில் பூங்காநகர்ப் பகுதி இளைஞர் அணி துணைச் செயலாளர் ஜி பி. விஷ்ணுகுமார் ஏழைகளுக்கு உணவு வழங்கினார். மன்றத்தலைவர் சுப்பிரமணியம், துணைச் செயலாளர் சேகர், வட்ட துணைச்செயலாளர் ஆர் கே. சம்பத், மற்றும் ராஜேந்திரன், கிருஷ்ணன், சகாயம், பி. சி. சந்திரன், சம்பத், சண்முகம் ஆதிமூலம், சேகர் உள்ளிட்ட கழகத் தோழர்களும் நிகழ்ச்சியில் பங்கேற்று ஏழைகளுக்கு உணவு வழங்கினர்.

# அன்னை ஜானகி எம்.ஜி.ஆருக்கு உறுதுணையாக இருப்போம்: அமைச்சர் ப. உ. ச. சபதம்

சென்னை ஜன. 17. அன்னை ஜானகி எம் ஜி. ஆருக்கு உறுதுணையாக இருப்போம் என்று அமைச்சா ப உ ச கூறினார்

திருவள்ளுவர் தின விழாவில் பங்கேற்றுதிருவள்ளுவர் படத்தினை திறந்து வைத்து அமைச்சர் ப. உ. ச. உரையாற்றினார். அவா பேசியதாவது:

தமிழகத்து மக்களுக்கு ஒளிவிளக்காகத் திகழ்ந்த தீபம் அணைந்த பிறகு இருளில் கிடைத்த அகல்விளக்காக அன்னை ஜானகி அம்மையார் அவர்கள் நமக்கு கிடைத்தார்கள்.

அகல் விளக்கு என்றதும் ஏதோ அகல் விளக்கு என்று எண்ணக் கூடாது. சின்ன விளக்குதானே என்று தவறாக நாம் கருதக்கூடாது

இந்தஅகல்விளக்கை அணையாமல் காப்பாற்றும் பொறுப்பு நாலரைக்கோடி தமிழ் மக்களுக்கு உண்டு.

இன்றையதினம் அன்னை ஜானகி அம்மையார் பங்கேற்கும் இந்த வள்ளுவர்விழாவில் திருவள்ளுவர் திருஉருவப் படத்தினை திறந்து வைப்பதில் பெருமை அடைகிறேன்

திருக்குறள் புத்தகம் அனைத்து இல்லங்களிலும் இருக்க வேண்டிய ஒன்று திருவள்ளவருக்கு பெருமை சேர்ப்பதில் அளவிலா மகிழ்ச்சி அடைந்தவர் இதய தெய்வம் புரட்சித்தலைவா தமிழுக்கு. தனது பத்தாண்டு கால ஆட்சியில் பல வழிகளில் பெருமை சேர்த்தவர் புரட்சித்தலைவர்.

புரட்சித்தலைவா செய்தது போல் வேறு யாரும் செய்ததில்லை.

உலகத்தமிழ் மாநாட்டை நடத்தினார். உலகத் தமிழ்ச் சங்கத்தை தொடங்கினார் தமிழுக்கென்று தனி பல்கலைக்கழகம் அமைத்தார்.

தமிழ் அறிஞர்களுக்கு பணமுடிப்பு கொடுத்து தொண்டாற்றியவர் புரட்சித் தலைவா.

உலகவரலாற்றில் அரசியல் தலைவர்களைப் பற்றி எழுதும் போது அதில் புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆர். நிச்சயம் இடம் பெறுவார்.

அவர் கலைக்க முடியாத ஓவியம், அழிக்க முடியாத காவியம்.

எம்.ஜி.ஆர். என்ற மூன்றெழுத்து தாரக மந்திரத்தை



நாம் சொல்லி கடமையாற்ற வேண்டும்.

நாட்டோரே நல்லோரே இளஞ்சிங்கங்காள் பார்போற்றும் அந்த பாரிவள்ளல் வழி வந்த அன்னைஜானகி எம்.ஜி. ஆருக்கு உற்ற துணையாக நின்று நாம் கடமை ஆற்றுவோம்.

இவ்வாறு ப.உ.ச. பேசினார்.

# கழகத் தோழர்களுக்கு அயோத்தி-ராமாவரமே

பொய் புரட்டு பித்தலாட்டங்கள் இவை அத்தனையையும் ஒட்டு மொத்தக் குத்தகை எடுத்து ஷோரும் நடத்துபவராக ராமசாமி மாமா செயல்படுவது பரிதாபத்திற்குரியது!

### திணிக்கப்பட்ட ஆட்சியாம் அன்னை ஜானகியின் ஆட்சி.

எழுபது எம் எல் ஏக்கள்எங்களைஆதரிக்கிறார்கள் என்றது ஒரு கோஷ்டி அந்த பலத்தைக் காட்டுங்கள் என்று ஆளுநர் கேட்டார் பேந்தப் பேந்த விழித்த அந்த கோஷ்டியினர் இப்போது முடியாது சட்டசபையைக் கூட்டும்போது பார்க்கலாம் என்றது.

ஆனால் அன்னை ஜானகியை முதல்வராக்க வேண்டும் என்று 97 எம் எல் ஏக்கள் ஆளுநரிடம் போய்ச் சொன்னார்கள்.

ராமசாமி மாமா ஆதரிக்கிற அந்தக் கும்பலின் பொய்யை ஆளுனர் கண்டு பிடித்து விட்டார். எழுபது எம்.எல்.ஏக்கள் ஆதரிக்கிறார்கள் என்றால் கழகத்தின் மொத்த எம் எல் ஏக்களின் எண்ணிக்கை நூற்றி அறுபத்தி ஏழா?

### ஆளுநரையே ஏமாற்ற முற்பட்ட கும்பலுக்கு ஆதரவுக் குரல் எழுப்புவதில் ஏதாவது தார்மீக நியாயம் உண்டா?

சாஸ்திரி மறைவுக்குப் பின் யாரை பிரதமராக்குவது என்று காங்கிரஸ் எம் பிக்களிடம் கருத்துக் கேட்டார். பெருந்தலைவர் காமராஜர் பெரும் பான்மையான எம்.பிக்கள் இந்திரா காந்தியை ஆதரித்தனர்

பெரும பொறுப்புகளிலிருந்த மொரார்ஜிதேசாய்க்கு பெரும்பான்மைகிட்டவில்லை, பெரும்பான்மை எம்.பி.க்களின் விருப்பப்படி இந்திராகாந்தி பிரதமர் ஆனார்.

பெரும்பான்மை எம் எல் ஏக்களின் விருப்பப்படி இங்கே அன்னை ஜானகி அம்மையார்முதல்வா பொறுப்பேற்றுள்ளார்

### இதிலே 'திணிப்பு' என்பதற்கு இடம் ஏது?

'ஜானகி அம்மாள்தான் என் வாரிசு' என்று இதயதெய்வம்உயில்எழுதி வைத்துள்ளார், ஆனால் ஜெயலலிதாவை ஏற்கெனவே வாரிசு என்று கருதினாராம் புரட்சிதலைவர் ராமசாமி மாமா கதைத்திருக்கிறார் இதய தெய்வத்தின் இறுதி ஆணை எது?

தீயதைப் பார்க்காதே தீயதைக் கேட்காதே-தீயதைப் பேசாதே என்கிற தத்துவத்தின் எதிரொலியாக இதயதெய்வம் சொன்னார் ஜெயலலிதாவுடன் பேசாதீர் ஜெயலலிதா சொல்வதைக் கேளாதீர்' என்பது தானே புரட்சித்தலைவரின் ஆணை!

ராமசாமி மாமாவுக்குப் பிரியமான ''இந்து' எக்ஸ்பிரஸ், ''நியூஸ் டைம்ஸ்'' ''இந்துஸ்தான்டைம்ஸ்'' ஏடுகளில் எல்லாம் இது பற்றி செய்திகள் வந்தனவே! மாமா எங்கே போனார் அப்போது? இறுதி ஆணை தானே நிலை ஆணை! இறுதி சிரிப்பு வெற்றிச் சிரிப்பாகாதிரி!

எம் ஜி ஆருடன் இருந்தவர் எழுதி விட்டாராம்! யார் எம் ஜி ஆருடன் இருந்தவர்? இரண்டு ஆண்டுகளாக எம். ஜி ஆரை சந்திக்காதவர்கள் புரட்சித் தலைவருடன் அவர் கண்மூடும்வரை இருந்தவர்களாம்!

### அடங்காப்பிடாரிகள் பற்றி அவர்கள் என்னென்ன சொன்னார்கள் என்பதை வேளைவரும் போது சொல்கிறோம்.

கொடி பிடிக்கும் தொண்டர் தான் முடிவு செய்ய வேண்டும் என்று கொடி பிடிக்காமல்- கோடி கோடி சேர்த்தவர்கள் சொல்லக் கூடாது.

### இதயதெய்வத்தின் கனவு எங்கள் கழகத்தோழர்களின் முடிவு-அதுவே அன்னை ஜானகியின் வரவு'

இதயதெய்வத்தின் ராமாவரம் தோட்டத்திலிருந்தே கழகத்தொண்டர்களின் அரசியல் தொடரும்.

### எங்களுக்கு அயோத்தி ராமாவரம் தோட்டம் தானே

### நச்சுப்பாம்பு படமெடுத்து ஆடும் தோட்டத்தை கழகத் தோழன் எப்படி ஏற்பான்? கழகத் தோழர்களை திசை திருப்பிவிடலாம் என்று ராமசாமி மாமா கதைக்கக்கூடாது

நூறுவரை எண்ணத் தெரிந்த எவரும் ஏற்கும் உண்மையை, ஆனவரை பொய்யெழுதி சொடுக்கும் இக் கூட்டம் ''இல்லை'' என்றாக்கி விட முடியாது,

-வால்மீக்

Regd: No. TN-MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE PAYMENT LICENCE NO G 6 - TN - MS (C) P. P. 55



லட்சியம்

நடைமுறைக்கு ஏற்றபடி செயல்படுவதும் ஒரு லட்சியத்தின் மீது தான் இருக்கவேண்டும்.

- பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

குடும்பநலம்

நல்வாழ்வும் நாணயமான வாழ்வும் பெற குழந்தைப் பேற்றைக் குறைத்துக் கொண்டு வாழ்க்கை வசதிகளை நல்ல வண்ணம் அமைத்துக் கொள்ள வேண்டும்.

- தந்தை பெரியார்



மலர் : 9 சென்னை 22-1-1985 செவ்வாய் ★ ★ வெளியூர் 23-1-1985 புதன் இதழ் 96

★ வயதுக்கும் தகுதிக்கும் மீறிய பொறுப்பில் ஜெயலலிதாவை உட்கார வைத்தது என்னுடைய தவறு!

★ அவரை நம்பி இந்த இயக்கத்தை நாம் ஆரம்பிக்கவில்லை. 1977 - 1980ம் ஆண்டுத் தேர்தலில் இந்த அம்மையார் நம்மோடு இல்லை!

★ என்னுடைய அனுமதி இல்லாமலேயே டெல்லியில் சில முக்கிய தலைவர்களைச் சந்தித்து நம்முடைய கட்சியைப் பற்றி பலவீனமாக ஜெயலலிதா பேசிய விஷயங்களை நான் தெரிந்து வைத்திருக்கிறேன்!

★ எனக்குத் தெரியாமல் பல இடங்களில் என்னுடைய பெயரை ஜெயலலிதா பயன்படுத்துவதை இனியும் தாங்கிக் கொள்ள முடியாது!

# வேறு கட்சிக்குப் போக
# ஜெயலலிதா சதி செய்கிறார்

## புரட்சித்தலைவர் பகிரங்கக் குற்றச்சாட்டு

"அந்த அம்மையாரைப் பிடித்துக் காரியங்கள் செய்து கொள்ளலாம் என்று நம்பியிருப்பவர்கள் அந்த அம்மையார் பின்னாலே போகட்டும்".

சென்னை, ஜன. 22- புரட்சித்தலைவரின் உடல்நிலை பற்றி தவறான பிரச்சாரத்தைச் செய்த கருணாநிதி கும்பலைத் தமிழக மக்கள் வேரோடும் வேரடி மண்ணோடும் தூக்கியெறிந்தார்கள். அதே பாணியில், கருணாநிதியைவிடக் கொடூரமான வார்த்தைகளில் புரட்சித் தலைவரின் உடல்நிலை பற்றி இதயமற்ற ஜெயலலிதா பேட்டியளிக்கிறார். கோடானு கோடி மக்களின் பிரார்த்தனைகளின் பலனாக மூன்றாம் பிறப்பெடுத்த இதயதெய்வத்தின் உடல்நிலை பற்றி கிஞ்சிற்றும் மனிதாபிமானமின்றிப் பேசி வருபவர்கள் கோடானு கோடி தமிழ் மக்களின் சாபத்திற்கு ஆளாகியுள்ளனர்.

ஜெயலலிதாவைப் பற்றி புரட்சித்தலைவர் என்ன கருதினார் - எப்படி ஒதுக்கி வைத்தார் - ஜெயலலிதாவின் சதிகளை எப்படி அறிந்து வைத்திருந்தார் என்பதை புரட்சித்தலைவர் பொதுக்குழுவில் ஆற்றிய உரை உலகிற்கு அறிவிக்கும்.

## நேற்றைய நடைமுறை-இன்றைய சரித்திரம்

# அடங்காப்பிடாரி ஜெயலலிதா துரோகம்

## அன்றே சொன்னார் புரட்சித்தலைவர்

சென்னை, ஜன. 17- ஜெயலலிதா வேறு கட்சிக்குப் போக பயங்கர சதி செய்கிறார் என்றும் வயதுக்கும் தகுதிக்கும் மீறிய பொறுப்பில் ஜெயலலிதாவை உட்கார வைத்தது என்னுடைய தவறு என்றும், அவரை நம்பி இந்த இயக்கத்தை நாம் ஆரமபிக்கவில்லை என்றும் 1977-1980-ம ஆண்டுத் தேர்தல்களில் இந்த அம்மையார் நம்மோடு இல்லை என்றும் எனக்குத் தெரியாமலேயே பல இடங்களில் என்னுடைய பெயரை ஜெயலலிதா பயன்படுத்துவதை இனியும் என்னால் தாங்கிக் கொள்ள முடியாது என்றும் 1984 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் நடைபெற்ற கழகப் பொதுக்குழுவில் இதயதெய்வம் புரட்சித்தலைவர் கூறினார்.

அடங்காப்பிடாரி ஜெயலலிதா மீது இதயதெய்வம் புரட்சித்தலைவர் அடுக்கடுக்காகச் சாட்டிய குற்றச்சாட்டுக்களை அப்போதே பல பத்திரிகைகள் வெளியிட்டிருந்தன 1984 தேர்தல் முடிந்தவுடன் கழகஆட்சி அமையவிடாமலும் புரட்சித்தலைவர் முதல்வர் பதவி ஏற்கவிடாமலும் தடுக்க ஜெயலலிதா சதி செய்த போது 'அண்ணா' நாளிதழிலும் வெளிவந்தது நினைவிருக்கலாம்.

(படம் மேலே)

1984ல் முதல்வர் புரட்சித்தலைவர் உடல்நலமில்லாமல் இருந்தபோது புரட்சிதலைவரின் எதிரிகளை விட மோசமான வார்த்தைகளில் அடங்காப்பிடாரி ஜெயலலிதா அவதூறு பரப்பி வந்தது நினைவிருக்கலாம்

ஜெயலலிதா பற்றி தான் என்ன நினைக்கிறேன் என்பதை 1500 பேர் கலந்து கொண்ட கழகப் பொதுக்குழுவில் இதய தெய்வம் புரட்சித் தலைவர் மனந்திறந்துபேசினார். 1984 செப்டம்பர் மாதம் இப்பொதுக்குழுநடைபெற்றது.

அப்பொதுக் குழுவில் முதல்வர் புரட்சித்தலைவர் பேசிய பேச்சு ஏற்கனவே 'அண்ணா' உள்ளிட்ட பல நாளிதழ்களில் வெளிவந்துள்ளன.

புரட்சித்தலைவரின் அன்றைய பேச்சை மீண்டும் இன்று வெளியிடுகிறோம்.

### இதயதெய்வம்

புரட்சித்தலைவர் பொதுக்குழுவில் பேசும் போது கூறியதாவது:-

கொள்கைபரப்புச் செயலாளர் பதவியிலிருந்து ராஜினாமா செய்துள்ள ஜெயலலிதாவின் ராஜினாமாவை நானே பொதுச்செயலாளர் பஉச அவர்களிடம் சொல்லி ஏற்றுக் கொண்டதாக அறிவித்து இருக்கலாம்.

ஆனால் அவருடைய கடிதத்தை பொதுக் குழுவில் வைத்து ஏற்றுக் கொள்வது நலம் என்று கருதித்தான் இதுவரை காலந் தாழ்த்தினேன்.

இந்த விலகல் கடிதத்தை ஏற்றுக் கொள்ளும்படி உங்கள் அனைவரையும் கேட்டுக் கொள்கிறேன்.

### தகுதி மீறிய உயர்வு

சில உறுப்பினர்கள்: மறு பரிசீலனை செய்யக்கூடாதா?

தொடர்ந்து புரட்சித் தலைவர் பேசுகிறார்

மறு பரிசீலனைக்கே இடமில்லை வயதுக்கும் தகுதிக்கும் மீறிய பொறுப்பில் அந்த அம்மையாரை உட்கார வைத்தது என்னுடைய தவறு.

### அவரை நம்பியா?

அவரை நம்பி இந்த இயக்கத்தை நாம் ஆரம்பிக்கவில்லை. 1977ல் நடந்த தேர்தலிலும் 1980ல் நடந்த தேர்தலிலும் இந்த அம்மையார் நம்மோடு இல்லை

### இன்னும் பொறுமையா?

என்னைக் கேட்காமலேயே என் பெயராலே அறிக்கைகள் விடுவது குறிப்பாக ஆந்திர மாநிலத்தில் என்.டி.ராமராவ் அவர்களின் ஆட்சி கலைக்கப்பட்டது குறித்து அறிக்கை விட்டதும் கண்டிக்கத்தக்கது.

இவைகள் எதுவும் கட்சியையோ என்னையோகலந்து பேசி தெரிவித்த கருத்துக்கள் இல்லை,

### கட்சி மாற பயங்கர சதி

இப்படிப் பல முறை எனக்குத் தெரியாமல் பல இடங்களில்என்னுடைய பெயரைப் பயன்படுத்துவதை என்னாலே இனியும் தாங்கிக் கொள்ளமுடியாது.

ஜெயலலிதா வேறு கட்சிக்குப் போவதற்கான வேலைகளைச் செய்து கொண்டிருக்கிறார் அந்த அம்மையாரைப் பிடித்துக் காரியங்கள் செய்து கொள்ளலாம் என்று நம்பியிருப்பவர்கள் அந்த அம்மையார் பின்னாலே போவது பற்றியும் எனக்கு கவலை இல்லை.

இவ்வாறு பொதுக்குழுவில் இதய தெய்வம் புரட்சித்தலைவர் பேசினார்.

புரட்சித்தலைவர் பேசி முடித்தவுடன் "புரட்சித் தலைவர் வாழ்க" என கூடியிருந்த 1500 கழகத்தவரும் விண்ணதிர முழக்கமிட்டு ஜெயலலிதா நீக்கப்பட்டதை ஏகமனதாக ஏற்றுக்கொண்டார்கள்

### தீர்க்க தரிசனம்

ஜெயலலிதா எவ்வளவு பெரியசதிகாரிஅடங்காபிடாரி என்பதை அன்றே அறிந்து வைத்திருந்த புரட்சித் தலைவரின் தீர்க்கத்தரிசனத்தை நினைத்தால் கண்கள் குளமாகின்றன-

### தடை உத்தரவு

சென்னை, ஜன. 17- சென்னை நகரில் இன்று முதல் (17-ந் தேதி) 15 நாட்களுக்கு போலீஸ் தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது இந்த நாட்களில் ஊர்வலங்கள், பொதுக்கூட்டங்கள், போலீசார் அனுமதியின்றி நடத்தக் கூடாது என்று சென்னை நகர போலீஸ்கமிஷனர் தேவாரம் தெரிவித்துள்ளார்.

# ஜானகி எம்.ஜி.ஆருக்கு துணை நிற்போம் திருக்குறளார் முழக்கம்

சென்னை, ஜன 17- அன்னை ஜானகி எம்.ஜி'ஆருக்குத் துணை நிற்போம் என்று திருக்குறள் முனுசாமி கூறினார்.

திருவள்ளுவர் தினவிழாவில் திருக்குறளார் முனுசாமி பேசியதாவது:

எங்கள் வாழ்நாள் முழுவதும் முதல்வர் ஜானகி எம்.ஜி. ஆருக்கு தொண்டாற்றுவோம். இந்த தொண்டு புரட்சித்தலைவருக்கு காட்டும் நன்றியாகும்.

புரட்சித்தலைவர் பசித்தோர் முகம் பார்த்து 365 நாளும் சோறு வழங்கினார். உலகம் போற்ற புகழுடன் விளங்கினார். அந்த நல்லவரது துணைவியார்ஜானகி அம்மையார் முதல்வராகி இருக்கிறார் அவருக்கு என்றென்றும் எல்லா காலத்திலும் துணை நிற்போம்.

இது புரட்சித்தலைவருக்கு செலுத்தும் நன்றியாகும் உங்களுக்கு எங்கள் ஆயுள் முழுவதும் ஆதரவுதர காத்து இருக்கிறோம். முதல்வர் பல்லாண்டு வாழ வேண்டும்.

இவ்வாறு திருக்குறளார் பேசினார்,

குறள்நெறி பரப்பும் மையத்தின் தலைவராக திருக்குறளார் முனுசாமியை முதல்வர் ஜானகி எம் ஜி ஆர் நியமித்துள்ளார்.

திருவள்ளுவர் தினவிழாவில் முதல்வர் ஜானகி எம் ஜி ஆர் சார்பில் அமைச்சர் பொன்னையன் இந்த அறிவிப்பை வெளியிட்டார்.

# உள்ளறுப்பு செய்யும் எஸ்.டி.எஸ். பிதற்றல்:

## அரசு கொறடா கண்டனம்

சென்னை, ஜன 17- எப்போதுமே கட்சிக்குள் இருந்து உள்ளறுப்பு வேலை செய்பவர் எஸ் டி. சோமசுந்தரம் என்று அரசு கொறடா துரை கோவிந்தராசன் குறிப்பிட்டார்



துரை கோவிந்தராசன் அறிக்கை வருமாறு:-

பொதுச்செயலாளர் காலமாகிவிட்டால், உடனே அந்த பதவி நிரப்பப்பட வேண்டும். என்றும் பொதுச் செயலாளரால் நியமிக்கப் பட்ட அத்தனை பேரும் பதவி இழந்துவிடுவார்கள் என்றும் எஸ். டி. சோமசுந்தரம் குறிப்பிட்டுள்ளார்.

கழகம் ஓர் குடும்பம் என்றார் பேரறிஞர் அண்ணா அதையே செயல்படுத்தியவர் நம் இதய தெய்வம் புரட்சித்தலைவர்

இதயதெய்வத்தின் ஒரே வாரிசாம் அன்னை ஜானகி எம் ஜி ஆர் அவர்களும் அதே வழியில் செயல்படுகிறார்.

பொதுச்செயலாளர் காலமானால் அவரால் நியமிக்கப்பட்டநிர்வாகிகள் அனைவரும் பதவி இழப்பார்கள் என்பது எங்கே உள்ள சட்டவிதி? காண்பிப்பாரா சோமசுந்தரம்?

அரசு என்பது வேறு கட்சி என்பது வேறு இரண்டையும் போட்டு அவர் ஏன் குழப்புகிறார்என்பது தெரியவில்லை

முதல்வர் இறந்தால் இடைக்கால முதல்வர் நியமித்தாகவேண்டும் ஆனால் கட்சி அப்படியா? அதற்கென்று விதிகளும் மரபுகளும் உண்டு.

இதய தெய்வத்தால் நியமிக்கப்பட்ட மூத்த துணைப் பொதுச்செயலாளர் அந்தப் பொறுப்புக்களை கவனிக்கிறார் இதயதெய்வத்தைப் போற்றுகிறவர்கள் அதை ஏற்கிறார்கள்.

ஆனால் தான்தோன்றித் தனமாக நானே பொதுச் செயலாளர் என்று தம் பட்டம் அடித்துக் கொள்ளும் பேர்வழிகளை கழகம் எப்படி ஏற்கும்? அது தான் விதிமுறையா?

இதயதெய்வம் புரட்சித் தலைவர் விரும்பியவண்ணம் அவரால் நியமிக்கப்பட்டவர்களால் கழகம் நடத்தப்படுகிறது.

தனது ஒரே வாரிசு என்று இதயதெய்வத்தினால் அடையாளம் காட்டப்பட்ட அன்னை ஜானகி எம்.ஜி. ஆர். தலைமையில் ஆட்சியும் கட்சியும் செவ்வனே செயல்படுகிறது.

எங்கே இருந்தாலும் உள்ளறுப்பு வேலை செய்கிற எஸ் டி சோமசுந்தரம் போன்றவர்கள் சும்மா இருப்பது நலம்,

இதய தெய்வத்தின் மீது உண்மையான பற்றும் பாசமும் இருக்குமானால், "ஜெயலலிதாவுடன்எவரும் எந்தத் தொடர்பும் வைத்துக் கொள்ளக் கூடாது', என்று இதய தெய்வம் பிறப்பித்த இறுதி ஆணையை ஏற்க வேண்டும்.

அப்படிஏற்றுக் கொள்பவர்களேஉண்மையான புரட்சித் தலைவரின் தொண்டர்கள் அவர்களைத்தான் தமிழக மக்கள் ஏற்றுக்கொள்வார்கள்

மத்தாப்பு சுந்தரிகளின் கித்தாப்புகள் சிறிதுநாளில் செல்லாக் காசாகி விடும் எஸ் டி சோமசுந்தரத்தைப் போன்றவர்கள், வீணாக "இதுதான் விதிமுறை.... அதுதான் விதிமுறை" என்று தவறான தகவல்களைக்கூறிதங்களைத் தாங்களேஏமாற்றிக்கொள்ள வேண்டாம்.

இவ்வாறு அரசு கொறடா துரைகோவிந்தராசன் அறிக்கையில் கூறியுள்ளார்.

# ஜனாதிபதி சுற்றுப்பயணம்

புதுடெல்லி, ஜன, 17- ஜனாதிபதி ஆர் வெங்கட்ராமன் வரும் 21ந்தேதி அந்தமான் போகிறார். அந்தமானில் 23ந் தேதிவரை சுற்றுப்பயணம் செய்கிறார் முன்னதாக 19ந்தேதி ஐதராபாத்திலும், 20ந் தேதி விஜயவாடாவிலும் பல்வேறு நிகழ்ச்சிகளில் ஜனாதிபதி வெங்கட்ராமன் பங்கேற்கிறார்.

# இன்று டி. வி.யில் இதயதெய்வம் நடித்த தெய்வத்தாய்

சென்னை தொலைக் காட்சியில் இன்று மாலை இதயதெய்வம் புரட்சித்தலைவர் நடித்த தெய்வத்தாய் படம் ஒளிபரப்பபடுகிறது.

புரட்சித்தலைவருடன் சரோஜாதேவி, அசோகன், நாகேஷ், பண்டரிபாய், மாதவி உள்ளிட்ட பலர் நடித்துள்ளனர்.

இப்படத்திற்கான இசையை எம்.எஸ்.விஸ்வநாதன் அமைத்துள்ளவர் சத்யா மூவிஸ் உருவாக்கியுள்ள இப்படத்திற்கான கதையை இயக்குனர் பாலச்சந்தர் எழுதிஉள்ளார். இந்தப் படத்தின் மூலம் தான் இயக்குனர் பாலச்சந்தர் சினிமாவுக்கு அறிமுகமானார்.

இப்படத்தில் ஒரு பெண்ணைப் பார்த்து நிலவைப் பார்த்தேன். மூன்றெழுத்தில் என் மூச்சிருக்கும் போன்ற அருமையான பாடல்கள்இடம் பெற்றுள்ளன. இப்படத்தை பி. மாதவன் இயக்கியுள்ளார்.

இதயதெய்வம் போடுகிற சண்டைக்காட்சிகள் மயிர்கூச்செறிய செய்யும் வகையில் உள்ளது.